


CANADA ULAHATHAMILAR

# உலகத்தமிழர்

சர்வதேச தமிழர் பத்திரிகை

www.worldtamils.com

குரல் 188 | ஜனவரி 20 - ஜனவரி 26, 2012 | இலவசம்!!




# பேச்சுவார்த்தையை அரசு நிறுத்தியது

# கிருஷ்ணாவின் விஜயம் பயனளிக்கவில்லை

# கூட்டமைப்பு புதுடில்லி செல்கிறது

## '13 பிளஸ்' - தீர்வுக்கு புதிய பொறிமுறை



## மகிந்த உறுதியளித்ததாக கிருஷ்ணா அறிவிப்பு

இலங்கை அரசின் போக்குக் குறித்து

அமெரிக்க பிரித்தானிய இராஜதந்திரிகளிடம் கூட்டமைப்பு எடுத்துரைப்பு



தமிழினத்தின் தாகம் தமிழீழத் தாயகம்

கனடா உலகத்தமிழர்

# ஆசிரியர் தலையங்கம்

## அமெரிக்கா குறித்து தமிழர்கள் கவலை

அண்மைக்கால அமெரிக்காவின் சில நடவடிக்கைகள் உலகத் தமிழர்களை கவலையடையச் செய்துள்ளது என்பதை குறிப்பிட விரும்புகிறோம். சிறிலங்காவின் போர்க்குற்றம் மனித உரிமை மீறல்கள் குறித்து சர்வதேச விசாரணைகள் இடம்பெற வேண்டும் என்பது தொடர்பாக கடந்த இரண்டரை ஆண்டுகாலமாக அமெரிக்கா காட்டி வந்த ஆர்வம் தற்போது சற்றுக் குறைவடைந்துள்ளதாகத் தெரிகின்றது. அதுமாத்திரமல்ல சிறிலங்காவுக்கு எதிராக பொருளாதாரத் தடை கொண்டுவரப்பட வேண்டும் எனக் குறிப்பிட்டு வந்த அமெரிக்கா தற்போது அந்நாட்டில் புதிய முதலீடுகளைச் செய்து வர்த்தக நடவடிக்கைகளில் ஈடுபட பேச்சுவார்த்தை ஆரம்பித்துள்ளதும் சந்தேகத்தை ஏற்படுத்தும் செயல்களாகும். அமெரிக்க வர்த்தகத் திணைக்களத் தலைவரே இவ்வாரம் சிறிலங்காவுக்குச் சென்று வர்த்தகத் தொடர்புகளுக்கான துரித நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளார். சிறிலங்காவுக்கு எதிரான மனித உரிமை மீறல்கள் குறித்து புகார்கள் இருப்பினும் அவை சிறிலங்காவுடனான வர்த்தக தொடர்புகளை பாதிக்கின்றது என்று அங்கு அவர் தெரிவித்திருப்பது அமெரிக்காவின் நிலையில் மாற்றம் ஏற்பட்டுள்ளதா என்ற கேள்வியையும் எழுப்பியுள்ளது. அமெரிக்காவின் இந்த மாற்றத்திற்கு இந்தியாவே காரணமாக இருக்கலாம் என்றும் குறிப்பிடப்படுகின்றது. முக்கியமாக அமெரிக்கா போர்க்குற்றம் தொடர்பான விசாரணைகளில் மும்முரம் காட்டினால், அது இந்தியாவின் நலனையும் பாதிக்கும்.

குறிப்பாக சோனியா காந்தியும் விசாரணைக்காக அழைக்கப்படலாம். எனவே இது குறித்து ஆலோசனை நடத்துவதற்காக அமெரிக்க இராஜாங்க அமைச்சின் பிரதி அமைச்சர் ஒருவர் இந்தியா சென்று திரும்பியுள்ளார். சிறிலங்காவுக்கு எதிரான போர்க்குற்ற விசாரணையை அமெரிக்கா முன்னெடுக்காமல் இருக்க வேண்டுமானால் இந்தியா, இலங்கைத் தமிழர்களுக்கு அரசியல் தீர்வொன்றைப் பெற்றுக்கொடுப்பதுடன் அகதிகளாக இருக்கும் அனைத்து தமிழ் மக்களும் மீள்குடியேற்றம் செய்யப்படவேண்டும் என்றொரு இரகசிய உடன்பாடு இரு நாடுகளுக்கிடையேயும் ஏற்பட்டிருக்கலாம் என்று தகவல் ஒன்று தெரிவிக்கின்றது. அந்த உடன்பாட்டின் அடிப்படையிலேயே கிருஷ்ணாவின் விஜயம் அமைந்திருந்ததாகவும் குறிப்பிடப்படுகின்றது. இம்முறை ஐ.நா. மனித உரிமைப்பேரவை மாநாடு பெப்ரவரி மாதம் 17ம் திகதியே நடைபெற இருப்பதனால் இந்தியாவும் சிறிலங்காவும் தமக்குச் சார்பான காய்களை நகர்த்த ஆரம்பித்துள்ளார்கள். ஆனால் தமிழ் தேசிய கூட்டமைப்பு அரசியல் தீர்வு தொடர்பான பேச்சுவார்த்தைக்கு தாம் எப்போதும் தயாராக உள்ளோம் எனக் கூறிவருவது மாத்திரமல்ல அரசு இறுதியாகக் கொடுத்த மூன்று நாட்களிலும் அது குறித்த அறிவித்தல்களை வழங்கிய வண்ணமே இருந்துள்ளது. அமெரிக்கா, பிரித்தானியா தூதுவர்களைச் சந்தித்து கூட்டமைப்பினர் சிறிலங்கா அரசு எம்முடன் பேச்சுவார்த்தை நடாத்த வருமாறு கூறிவிட்டு இப்போது அதில் கலந்துகொள்ளாமல் ஏமாற்றிக்கொண்டு செல்கின்றது என்றும் தெளிவுபடுத்தியுள்ளார். நாடாளுமன்றத் தெரிவுக்குழுவுக்கு முன்னால் பங்கு பற்றினால் மாத்திரமே அரசுடனான பேச்சுவார்த்தை தொடரும் என சிறிலங்கா இதுவரை உத்தியோகப்பூர்வமாக அறிவிக்கவில்லை.

ஆனால் பேச்சுவார்த்தையில் ஒரு முடிவு எடுக்கப்பட்டு, அந்த முடிவு நாடாளுமன்ற தெரிவுக்குழுவில் சமர்ப்பிக்கப்பட்டால் மாத்திரமே தாங்கள் அதில் பங்குபற்ற முடியும் என ஏற்கனவே கூட்டமைப்பு தெரிவித்துவிட்டது. அதனால் என்ன செய்வது என்று தடுமாறும் மகிந்த தற்போது எதிர்க்கட்சித் தலைவர் ரணில் விக்கிரமசிங்கவை இந்தியாவுக்கு அனுப்பி வைத்துள்ளார். மகிந்தவுக்கு வக்காலத்து வாங்குவதற்காக அவரும் திடீரென புறப்பட்டுச் சென்றுள்ளார். இந்தியா அப்படியாவது தமிழ் தேசிய கூட்டமைப்பை நாடாளுமன்ற தெரிவுக் குழுவில் பங்குபற்றச் செய்ய வேண்டும் என்பதே அவரின் விஜயத்தின் நோக்கமாகும். ஆனால் தமிழ் தேசிய கூட்டமைப்பு ஜனாதிபதியின் நல்லிணக்க ஆணைக்குழுவுக்கு எதிராக வெளியிட்டுள்ள அறிக்கை சிறிலங்காவில் உள்ள சகல வெளிநாட்டுத் தூதுவராலயங்களுக்கும், ஐ.நா. மற்றும் மனித உரிமை அமைப்புகளுக்கும் அனுப்பி வைக்கப்பட்டுள்ளது. இது சிறிலங்காவுக்கு மிகப்பெரிம் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளதாக குறிப்பிடப்படுகின்றது. பாதிக்கப்பட்டவர்களின் சார்பான அறிக்கையை உலகம் முக்கிய கவனத்தில் எடுத்துக்கொண்டுள்ளதினால் மகிந்த ஆத்திரமடைந்துள்ளதாக தகவலொன்று தெரிவிக்கின்றது. மனித உரிமைப் பேரவையில் சிறிலங்காவுக்கு எதிரான விவாதம் ஏற்பட்டால் அதில் தமிழ் தேசிய கூட்டமைப்பின் அறிக்கையும் முக்கிய இடத்தைப் பிடிக்கும் என்பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறோம். இதேவேளையில் அமெரிக்காவின் ஜனநாயக ஒழுங்கை உலகத் தமிழ் மக்கள் மிகவும் எதிர்பார்க்கிறார்கள் என்பதையும் தெரிவிக்க விரும்புகிறோம்.

கனடியத் தமிழர் நினைவெழுச்சி அகவம் விடுக்கும்

# தமிழர் தேசிய நினைவெழுச்சி நாள் அறிக்கை - 2011

தமிழீழ மண்ணின் விடுதலைக்காகவும், தமிழ் மக்களின் சுதந்திர உரிமை வாழ்விற்காகவும் தம்மை ஈகம் செய்த எம் மாவீரர்களின் இலட்சியம் நிறைவேறவும், ஈழத்தமிழர்தம் வாழ்வு வளம் பெறவும், எம் தாயக உறவுகளின் இன்னல்கள் தீர்ந்து சொந்த மண்ணில் மகிழ்ச்சியாக வாழவும் வேண்டித் தமிழ்ப் புத்தாண்டை வரவேற்றுத் தமிழ்ப் புத்தாண்டு நல்வாழ்த்துக்களைத் தமிழ் மக்கள் அனைவருக்கும் கனடியத் தமிழர் நினைவெழுச்சி அகவம் தெரிவித்துக் கொள்கின்றது.

தமிழர் தேசிய நினைவெழுச்சி நாள் 2011 கனடாவில், ரொரன்ரோவில் வழமைபோல் ஒரே இடத்தில் நான்கு நிகழ்வாக ஒருமித்த உணர்வோடு ஒன்றிணைந்த மாபெரும் மக்கள் சக்தியோடு எழுச்சியுடன் உணர்வுபூர்வமாக நடைபெற்றது. இந்த மக்கள் எழுச்சியானது, கனடியத் தமிழர்களின் ஒற்றுமையையும் தேசியப் பற்றையும் உணர்த்தியுள்ளதுடன் இனி வரும் வருடங்களிலும் இதேபோன்று. ஒரே இடத்தில். ஒரே நாளில், ஒரே வழிநடத்தலில் தமிழர் தேசிய நினைவெழுச்சி நாள் மக்கள் எழுச்சியுடன் நடைபெறும் என்பதையும் எடுத்தக்காட்டியுள்ளது.

கனடியத் தமிழர் நினைவெழுச்சி அகவத்தினால் நடத்தப்பெற்ற தமிழர் தேசிய நினைவெழுச்சி நாள் 2011 சிறப்பாக நடைபெறுவதற்குத் தேசியத்தில் ஆர்வமும், அக்கறையும் கொண்ட பலர் இணைந்து தமது பங்களிப்பை முழுமையாக நல்கினர். இவர்கள் அனைவரதும் ஒருமித்த பங்களிப்பு எதிர்கால எமது தொடர்ச்சியான மாவீரர் பணிகளை முன்னெடுப்பதற்கு மேலும் வளம் சேர்ப்பதாக அமையும் என்பதில் நாம் உறுதியான நம்பிக்கை கொண்டுள்ளோம்.

மார்க்கம் ஃபெயர் கிரவுண்ட் வெளியரங்கத் திடலில் நடைபெற்ற தமிழர் தேசிய நினைவெழுச்சி நாள் 2011 நிகழ்வுக்காக நிதிப் பங்களிப்புச் செய்த தமிழின உணர்வாளர்கள் இந்த ஆண்டுக்குரிய வரவு. செலவுக் கணக்கைப் பார்வையிட விரும்பினால், கனடியத் தமிழர் நினைவெழுச்சி அகவத்துடன் தொடர்பு கொண்டு கணக்குவிபரங்களைப் பார்வையிடலாம். நீங்கள் பங்களித்தமைக்கான பற்றுச் சீட்டை உறுதிப்படுத்திய பின்பு வரவு செலவு விபரங்களை நீங்கள் வெளிப்படையாகப் பார்வையிடலாம். இந்த ஆண்டுத் தமிழர் தேசிய நினைவெழுச்சி நாள் கடந்த ஆண்டுகள் போன்று மக்களின் உணர்வுமிகு வருகையினால் மேலும் நிறைந்து வழிந்தது. ஆரம்ப நிகழ்வான காலை 6:30 மணி நிகழ்வு முதல் இறுதி நான்காம் நிகழ்வுவரை பதினைந்து மணித்தியாளங்களாக அரங்கைத் தொடர்ந்து முழுமையாக நிறைத்துப் புலம்பெயர் வாழ்வின் சரித்திரமாகப் பல்லாயிரத்தில் மக்கள் வருகை தந்து மலர்வணக்கம், அகவணக்கம் செய்து மாவீரர்களை நினைவு கூர்ந்தனர்.

தாயகத்தில் இன்றுள்ள நெருக்குவார நிலைகளுக்குள் மாவீரர் நாள் நினைவுகளை, நிகழ்வுகளை வெளிப்படையாக வெளிப்படுத்துவதில் தாயக உறவுகள் பெரும் சவால்களை எதிர்கொண்டுள்ள நிலையில் எந்தவித விட்டுக்கொடுப்பிற்கும் இடங்கொடாமல் எம் மாவீரர்களின் தேசிய எழுச்சி நாளைச் சிறப்பாகவும் எழுச்சியாகவும் 2011இல் கனடாவில் நடத்தி முடித்ததில் கனடியத் தமிழின உணர்வாளர்கள் அனைவருக்கும் முழுமையான பங்குண்டு. அது குறித்து நாம் அனைவரும் பெருமைப்பட்டுக்கொள்ளளாம்.

இந்த மாபெரும் வணக்க நிகழ்வுக்கான நிதிப் பங்களிப்பு விபரம் கனடிய டொலர்களில் வருமாறு

**மொத்த வரவு: 153,628.16 டொலர்கள்**
**மொத்தச் செலவு: 165,420.79 டொலர்கள்**
**நிலுவை: 11,702.63 டொலர்கள்**

நிலுவையாக உள்ள நிதியை விரைந்து திரட்டி வரவு செலவுக் கணக்கைச் சமன் செய்ய வேண்டியவர்களாக கனடியத் தமிழர் நினைவெழுச்சி அகவம் உள்ளது. இதற்கான பல்வேறு முயற்சிகளில் அகவம் தொடர்ந்தும் செயற்பட உள்ளது. கனடியத் தமிழர் நினைவெழுச்சி அகவத்துக்குப் பங்களிப்புச் செய்ய ஆர்வமுள்ளவர்களின் பகிர்வை நாம் தொடர்ந்தும் வரவேற்கின்றோம்.


## கனடா உலகத்தமிழர் பத்திரிகை முகவரி:

**Canada Ulahathamilar**
**705 Progress Avenue, Unit 106,**
**Scarborough, Ontario. M1H 2X1.**

தொலைபேசி / Tel.: 416 303 7675 / 416 438 3030
தொலைநகல் / Fax: 416 438 6999
மொன்றியல் / Montreal: 514 625 5891
மின்னஞ்சல் / Email: editor@worldtamils.com
இணையம் / Web: www.worldtamils.com

# இந்தியா விரைகிறது கூட்டமைப்பு பிரதமர் மன்மோகனுடனும் சந்திப்பு

## கிருஷ்ணாவுடனான பேச்சையடுத்து சம்பந்தன் தலைமையில் குழு பயணம்

அரசு தமிழ்த் தேசியக் கூட்டமைப்புப் பேச்சுக்கள் முடங்கியுள்ள நிலையில், கூட்டமைப்பினர் இந்தியாவுக்கு உத்தியோகபூர்வ பயணம் மேற்கொள்ளத் தயாராகி வருகின்றனர். அநேகமாக அடுத்த மாத நடுப்பகுதியில் இந்தப் பயணம் இடம்பெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

ஏற்கனவே பல தடவை புதுடில்லிக்குச் சென்ற கூட்டமைப்பினர், அந்நாட்டு பிரதமர் மன்மோகன் சிங்கைக் கூட்டாகச் சந்திக்க நேரகாலம் வாய்ப்பு கிட்டவில்லை. தலைவர் சம்பந்தன் மட்டுமே ஒரு தடவை மன்மோகனைச் சந்தித்திருந்தார். ஆனால், இம்முறை கூட்டமைப்பினர் மன்மோகன் சிங் மற்றும் அரசியல் தலைவர்களை சந்தித்து பேச்சு நடத்துவர் என்று கொழும்பில் இராஜதந்திர வட்டாரங்கள் நம்பிக்கை வெளியிட்டுள்ளன.

அதேசமயம் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்பந்தன் தலைமையிலான நாடாளுமன்ற உறுப்பினர் குழுவொன்றே விரைவில் இந்தியா விரைகின்றது என்று பெயர் குறிப்பிட விரும்பாத இந்திய இராஜதந்திரி ஒருவர் வியாழனன்று கொழும்பில் தெரிவித்தார். இதற்கான ஏற்பாடுகளை இந்திய வெளிவிவகார அமைச்சு மேற்கொண்டு வருகின்றது என்றும் அவர் குறிப்பிட்டார்.

இலங்கைக்கு உத்தியோகபூர்வ பயணமொன்றை மேற்கொண்ட இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம்.கிருஷ்ணா, தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை கடந்த 16ஆம் திகதி சந்தித்துப் பேச்சு நடத்தினார். இதன்போதும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் இந்திய விஜயம் குறித்து கருத்துப் பரிமாறல்கள் இடம்பெற்றுள்ளன என்றும் தெரியவருகிறது. ஐ.நா. மனித உரிமைப் பேரவைக் கூட்டத்தொடர் மார்ச் மாதம் ஜெனிவாவில் நடைபெறவுள்ள நிலையில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை இந்தியா அழைத்துப் பேசவுள்ளமை கொழும்பு அரசியல் வட்டாரத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

ooooooooooooooo

# இலங்கை அரசின் புறக்கணிப்புக் குறித்து இரா சம்பந்தன் அமெரிக்க, பிரித்தானிய தூதர்களிடம் விளக்கம்

இனப்பிரச்சினை தீர்வு விடயத்தில் அரசாங்கத்தின் புறக்கணிப்பு நடவடிக்கைகள் குறித்து கொழும்பிலுள்ள அமெரிக்க, பிரித்தானிய தூதுவர்களுக்கு தமிழ்த் தேசிய கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்மந்தன் விளக்கமளித்துள்ளதாக கொழும்பு தகவல்கள் தெரிவிக்கின்றன.

கடந்த செவ்வாய்க்கிழமை பேச்சுக்கு சென்றபோது அரசதரப்பு பிரதிநிதிகள் சமூகமளிக்காமை தொடர்பாகவும் அதற்கான காரணம் அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படாதமை குறித்தும் சம்மந்தன் விளக்கமளித்ததாக கூறப்படுகின்றது.

தமிழ் மக்களின் அனைத்து அரசியல் கோரிக்கைகளையும் தேசிய பாதுகாப்பு என்று கூறி அரசு நிராகரிப்பதாகவும், சிங்கள மக்கள் மத்தியில் தவறான பரப்புரைகளை அரசும், அரச ஊடகங்களும் மேற்கொண்டு வருவதாகவும் அவர் தெரிவித்தார்.

தமிழ்த் தேசிய கூட்டமைப்பை மக்கள் மத்தியில் இருந்து அந்நியப்படுத்துவதற்கான வேலைத்திட்டங்களில் இலங்கை அரசு தீவிரமாக ஈடுபட்டு வருவதாகவும் சம்மந்தன் அமெரிக்க, பிரித்தானிய தூதுவர்களிடம் சுட்டிக் காட்டியதாக கூட்டமைப்பு தகவல்கள் குறிப்பிட்டன.

## இலங்கைச் செய்திகள்

# த.தே.கூ.வை மீண்டும் ஏமாற்றியது சிங்களம்

இனப்பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற்கான அரசியல்தீர்வு மற்றும் அதிகாரப்பகிர்வு குறித்து தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் பேச்சு நடத்தும் சிறிலங்கா அரசு 18ஆம் திகதி நடைபெற விருந்த பேச்சுக்களில் கலந்துகொள்ளவில்லை.

தொடர்ந்து மூன்று நாட்கள் நடத்த திட்டமிட்டிருந்த பேச்சுக்களில் இரண்டாவது நாளும் அரசதரப்பு முன்னறிவிப்பின்றி கலந்து கொள்ளாததால், இந்தப் பேச்சுக்கள் தொடர்ந்து நடைபெறுமா என்பது கேள்விக்குள்ளாகியுள்ளது.

திட்டமிட்டபடி தாம் பேச்சுக்களுக்குச் சென்றிருந்த போதும் அரசதரப்பில் இருந்து யாரும் வரவில்லை என்று தமிழ் தேசியக் கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்பந்தன் தெரிவித்தார்.

"நாடாளுமன்ற தெரிவுக்குழுவுக்குத் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு தமது பிரதிநிதிகளை நியமிக்க முன்வராத நிலையில், அவர்களுடன் பேசப் போவதில்லை என்று அரச தரப்பில் இருந்து சில கருத்துக்கள் முன்பே வெளிவந்தன.

இருந்தாலும் பேச்சுக்கள் தொடரும் என மற்றொரு அரசுத்தரப்பிலிருந்து கருத்து வந்ததாலேயே நாங்கள் பேச்சுக்குத் தயாராக இருந்தோம்.

சிறிலங்கா அதிபருக்கும் எனக்கும் இடையே நடைபெற்ற பேச்சுக்களை அடுத்தே தடைபட்டிருந்த பேச்சுக்கள் மீண்டும் தொடங்கின. அவருடன் செய்து கொண்ட உடன்பாட்டுக்கு மாறாக கூட்டமைப்பு எதையும் செய்யாத நிலையில், சிறிலங்கா அரசாங்கம் வித்தியாசமாக நடக்க வேண்டியத் தேவை இல்லை.

சிறிலங்கா அரசாங்கம் திட்டமிட்டபடி, செவ்வாய்,புதன் ஆகிய இருநாட்களிலும் பேச்சுக்கள் நடக்கவில்லை.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் நடைபெறும் பேச்சுக்களின் மூலமும் நாடாளுமன்றத் தெரிவுக் குழுவின் மூலமும் இனப்பிரச்சினைக்கு தீர்வு காணப்பட வேண்டும் என்று இந்திய வெளியுறவு அமைச்சர் தெளிவாக தெரிவித்துள்ள நிலையில், இது குறித்து சிந்தித்து முடிவெடுக்க வேண்டிய கடப்பாடு சிறிலங்கா அரசுக்கு இருக்கிறது.

நாம் ஏன் நாடாளுமன்றத் தெரிவுக் குழுவுக்கு உறுப்பினரை நியமிக்கவில்லை என்பதை சிறிலங்கா அரசுக்கும், இந்திய வெளியுறவு அமைச்சருக்கும் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளோம்.

பேச்சுக்களின் மூலமே ஒரு அரசியல்தீர்வு காணப்பட வேண்டும் என்பதை எமது தரப்பு விரும்புகிறது. அதேசமயம் அது முறையாக நடைபெற வேண்டும் என்பதில் நாங்கள் உறுதியாக இருக்கிறோம்" என்று கூறியுள்ளார்.

# இந்தியா தலையிடத் தவறினால் பேச்சுக்கள் முறிந்து போகும்

**- த.தே.கூ.**

திங்கள் இரவு கொழும்பு நகரிலுள்ள விடுதியொன்றில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்பந்தன் தலைமையிலான நாடாளுமன்ற உறுப்பினர்கள் சுரேஸ் பிறேமச்சந்திரன், எம்.ஏ.சுமந்திரன், செல்வம் அடைக்கலநாதன், பொன்.செல்வராசா, மாவை சேனாதிராசா ஆகியோர் இந்திய வெளிவிவகார அமைச்சரைச் சந்தித்துப் பேசினர்.

இந்தச் சந்திப்பின் போது தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு ஒதுக்கப்பட்ட 45 நிமிடங்களும், சிறிலங்கா அரசுடன் நடத்தப்படும் பேச்சுக்கள், அதன் போக்கு, தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு எழுந்துள்ள அவநம்பிக்கைகள் மற்றும் இந்தியாவின் தலையீடு குறித்தே பேசப்பட்டுள்ளது.

ஏனைய எந்த விடயங்கள் குறித்தும் பேசப்படவில்லை என்றும் தெரிய வருகிறது.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு பிரதிநிதிகள் கூறிய விடயங்களை செவிமடுப்பதிலேயே இந்திய வெளிவிவகார அமைச்சர் கவனம் செலுத்தியதாகவும், அதுபற்றிய மேலதிக விளக்கங்களைக் கோருவதில் அக்கறை காண்பிக்கவில்லை என்றும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

மேலும், இதுகுறித்து இந்தியத் தரப்பில் எந்த வாக்குறுதிகளும் அளிக்கப்பட்டதாகவும் தகவல் இல்லை.

அதேவேளை, இந்தச் சந்திப்புக் குறித்து நாடாளுமன்ற உறுப்பினர் சுரேஸ் பிரேமச்சந்திரன் கருத்து வெளியிடும் போது, "வடக்கு கிழக்கு மாகாணங்களுக்கு கூடுதல் அதிகாரம் வழங்குவது மற்றும் இனப்பிரச்சினைக்கு அரசியல்தீர்வு காண்பது தொடர்பாக சிறிலங்கா அரசுடன் கடந்த ஒரு ஆண்டு காலமாக பலமுறை பேசிவிட்டோம். ஆனாலும் இந்தப் பேச்சுக்களில் முன்னேற்றம் ஏதும் வரவில்லை. பேச்சுக்களில் அக்கறையற்ற நிலையிலேயே சிறிலங்கா அரசாங்கம் உள்ளது.

இந்தியாவிடம் பலமுறை வாக்குறுதிகளை அளித்திருந்தும், இழுத்தடிப்பு செய்யும் நோக்கிலேயே சிறிலங்கா அரசாங்கம் செயற்பட்டு வருகிறது. காணி தொடர்பான அதிகாரங்கள், காவல்துறை அதிகாரங்கள் போன்றவற்றை வடக்கு, கிழக்கு மாகாணங்களுக்கு வழங்கப் போவதில்லை என்பதில் சிறிலங்கா அதிபர் உறுதியாக இருக்கிறார்.

இந்தியாவின் ஏற்பாட்டிலேயே இந்தப் பேச்சுக்கள் நடந்தன. எனவே, இந்தியா இந்த விடயத்தில் முக்கிய பாத்திரத்தை வகிக்க வேண்டும்.

இந்தியா இந்த விடயத்தில் தலையிட்டு பங்களிக்கத் தவறினால் இந்தப் பேச்சுக்கள் தோல்வியடையும். பேச்சுக்களைத் தொடர முடியாத நிலை ஏற்படும்.

வடக்கு, கிழக்கு நிலைமைகளில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. முன்னைய நிலையே தொடர்கிறது என்பதை இந்திய வெளிவிவகார அமைச்சருக்கு எடுத்துக் கூறியுள்ளோம்" என்று தெரிவித்துள்ளார்.

**பனங்காட்டான் எழுதும் வாரசாரம்**

# இந்தியாவை நம்பிய கூட்டமைப்பு
# இனி என்ன செய்யப் போகிறது?

அரசியல் ரீதியாக மிகவும் பரபரப்பாகப் பேசப்பட்ட இந்திய வெளிவிவகார அமைச்சர் கிருஷ்ணாவின் இலங்கைக்கான நான்கு நாள் பயணம் முடிந்து அவர் நாடு திரும்பி விட்டார்.

இந்தப் பயணத்தின் போது எதிர்பார்க்கப் பட்டவை ஏதாவது சரியாக நடந்தனவா என்பதை விட, எதிர்பாராத பல நிகழ்ந்துள்ளன என்பதுவே சூடான செய்தி.

இந்திய அமைச்சர் எஸ்.எம்.கிருஷ்ணா எதற்காக இலங்கைக்குப் பயணம் மேற்கொண்டார் என்ற கேள்வி இப்போது பலரிடமும் எழுந்துள்ளது.

இதுதொடர்பாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினர் விவரமாக எதனையும் தெரிவிக்க முடியாதளவுக்கு மௌனிக்கப்பட்டுள்ளனர் என்பதை அவதானிக்க முடிகின்றது.

அமைச்சர் கிருஷ்ணா இலங்கையில் கலந்துகொண்ட முதலாவது நிகழ்ச்சி, அலரி மாளிகையில் இடம்பெற்ற பொங்கல் விழாவில் பங்குபற்றியது. பொங்கல் முடிந்து இரண்டு நாட்களின் பின்னர் தைப்பொங்கலையும் பட்டிப் பொங்கலையும் ஒன்றாக இணைத்து 17ஆம் திகதியன்று இது ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்தப் பொங்கல் விழா பற்றி அமைச்சர் கிருஷ்ணா என்ன சொன்னார் என்பதை அறிய இலங்கை அரசாங்க கட்டுப்பாட்டிலுள்ள 'தினகரன்' நாளேட்டின் செய்தியில் இடம்பெற்ற சில வரிகளை இங்கு பார்ப்பது பொருத்தமானது.

**- பனங்காட்டான் -**

'இலங்கை ஜனாதிபதி நல்லதொரு பண்பாளர் என்பதை ஒரு சம்பவம் மூலம் நான் புரிந்துகொண்டேன். நேற்றுக் காலையில் அலரி மாளிகையில் பொங்கல் விழா நடைபெற ஏற்பாடாகியிருந்தது. ஆனால், நான் மாலையில்தான் கொழும்பு வருவேன் என்பதை அறிந்துகொண்ட ஜனாதிபதி, அந்த விழாவில் நானும் கலந்துகொள்வதற்கு வசதியாக மாலைவரை ஒத்தி வைத்தார். இதனால், நான் மனம் நெகிழ்ந்து ஜனாதிபதியைப் பாராட்டினேன்' என்று கிருஷ்ணா புகழாரம் சூட்டியதாக 'தினகரன்' பத்திரிகைச் செய்தி தெரிவிக்கின்றது. இந்தப் பொங்கல் விழா இந்திய அமைச்சரை மகிழ்ச்சிப்படுத்தவே ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஒன்று என்பதையும், ஒருவகையில் இது ஒரு மகிழ்வூட்டும் அரசியல் நிகழ்வு என்பதையும் இந்திய அமைச்சர் புரிந்துகொள்ளவில்லைப் போலும்.

இந்தப் பொங்கல் விழாவில் சர்க்கரைப் பொங்கலை ரசித்து ருசித்தவரால் மகிந்தவுக்கு எதிராக எதுவும் பேச முடியாது முதல் நாளன்றே வாய்க்குப் பூட்டுப் போடப்பட்டது. 'நக்குண்டார் நா இழந்தார்' என்பது அர்த்தமுள்ள பழமொழி.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினரை அமைச்சர் கிருஷ்ணா சந்தித்துப் பேசியது எதிர்பார்க்கப்பட்ட ஒரு நிகழ்வு.

துரிதமான அரசியல் தீர்வை விரும்பும் கூட்டமைப்பினர், அதற்காக இலங்கை ஜனாதிபதிக்கு இந்தியா அழுத்தம் கொடுக்க வேண்டும் என்று கிருஷ்ணாவிடம் வேண்டினார். சாதகமாகவே அவரது பதிலும் அமைந்தது.

நல்லிணக்க ஆணைக்குழு அறிக்கையை வரவேற்று கருத்து வெளியிட்ட ஓரிரு நாடுகளில் இந்தியா முக்கியமானது. குழுவின் சிபார்சுகளை இலங்கை அரசு விரைந்து செயற்படுத்த வேண்டும் எனவும் அது கேட்டிருந்தது.

நல்லிணக்க ஆணைக்குழு அறிக்கையின் ஒவ்வொரு அம்சத்தையும் தனித்தனியாக விமர்சித்து, ஆணைக்குழு செய்யத் தவறிய விடயங்களைச் சுட்டிக்காட்டி நூற்றிப் பதினைந்து பக்கங்கள் கொண்ட அறிக்கையை கிருஷ்ணாவின் விஜயத்துக்கு சில தினங்களுக்கு முன்னர் கூட்டமைப்பு வெளியிட்டது.

மொத்தத்தில், நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கையை கூட்டமைப்பு நிராகரித்து விட்டது. இந்தியாவைப் பொறுத்தளவில் இதனை மனதார ஒப்புக்கொள்ள முடியாது. இலங்கையைக் காப்பாற்றும் பாணியில் தன்னையும் காப்பாற்றிக்கொள்ள வேண்டிய நிலையில் உள்ள இந்தியா, எப்போதும் சீனாவைச் சாட்டாக முன்னிறுத்தி இலங்கையை ஆதரிக்கும் என்பது மறைப்பான விடயம் அல்ல.

இலங்கை அரசுக்கும் கூட்டமைப்புக்கும் இடையில் 2011ஆம் ஆண்டில் நடைபெற்ற 18 சுற்றுப் பேச்சுகளில் எந்த நகர்வும் இடம்பெறவில்லை. இந்தியாவை தம்பக்கத்தில் வைத்திருப்பதற்காக, அதன் விருப்பத்தின் பேரில் இந்தப் பேச்சுவார்த்தை இதுவரை இடம்பெற்றது.





13ஆவது அரசியல் திருத்தம் என்பதை ஒரு மையப்புள்ளியாக இலங்கையும் இந்தியாவும் வைத்துள்ளன. 1987இல் இடம்பெற்ற ராஜீவ்-ஜே.ஆர். ஒப்பந்தத்தில் 13ஆவது அரசியல் திருத்தம், அப்போதிருந்த நிலைமையில் அவசியமானது.

'அது முடிந்த கதை' என்று இலங்கை அடிக்கடி, பல தடவை பகிரங்கமாகச் சொல்லி விட்டது. அதுக்கும் குறைவான இந்திய பஞ்சாயத்து அதிகாரங்களைக் கொண்ட நிர்வாக அலகே, அரசியல் தீர்வு என்று மகிந்த அரசு குறிவைத்துச் செயற்படுகின்றது.

ஆனால், இப்போது '13 பிளஸ்' என்றொரு புதிய சொற்பதம் பயன்படுத்தப்படுகின்றது. அதாவது, 13ஆவது அரசியற் திருத்தத்துக்கும் அப்பாற் சென்று, அதனிலும் பார்க்கக் கூடுதலான அதிகாரங்களைக் கொண்ட தீர்வை வழங்குவதற்கு ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச விருப்பம் கொண்டுள்ளதாகவும், அதனை 18ஆம் திகதி காலையில் உரையாடும்போது அவர் தெரிவித்ததாகவும் அமைச்சர் கிருஷ்ணா கூறியுள்ளார்.

13ஆவது திருத்தத்துக்கு குறைவானவைகள் கூடத் தரமுடியாது என்று சொல்பவர்கள், இப்போது அதனிலும் கூடுதலான சுதந்திரம் தரப்போவதாகக் கூறுவதை நம்ப முடியுமா?

"இந்தப் பேச்சுவார்த்தை பற்றி தமிழ் மக்கள் எங்களிடம் கேள்விகள் கேட்கத் தொடங்கியுள்ளனர். தமிழ் மக்களுக்கு நம்பிக்கையீனம் ஏற்பட்டால் இந்தப் பேச்சைத் தொடர்ந்து நடத்த முடியாது" என்று அமைச்சர் கிருஷ்ணாவிடம் கூட்டமைப்பினர் நேரடியாகத் தெரிவித்துள்ளதாக யாழ். 'உதயன்' பத்திரிகை தெரிவித்துள்ளது.

இந்தப் பத்திரிகையின் உரிமையாளர் கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினராக இருப்பதால் இந்தச் செய்தியில் தவறிருக்க முடியாது.

கடந்த மாதம் தமிழ் குடிசார் சமூகத்தினர் கூட்டமைப்புக்கு அனுப்பிய விண்ணப்பத்தில் தெரிவிக்கப்பட்ட அல்லது எழுப்பப்பட்ட விடயங்களையே 'கேள்வி கேட்கத் தொடங்கியுள்ளனர்' என்று கூட்டமைப்பினர் குறிப்பிட்டதற்கு காரணமாக இருக்கலாம். அப்படியானால் இது நல்லதொரு ஆரம்பம்.

அமைச்சர் கிருஷ்ணாவின் இந்த நான்கு நாள் விஜயத்தின் போது இரு நாடுகளுக்குமிடையில் ஐந்து ஒப்பந்தங்கள் கைச்சாத்திடப்பட்டுள்ளன.

அதேசமயம் நல்லிணக்க ஆணைக்குழு அறிக்கையை வரவேற்றுள்ள இந்திய அமைச்சர் கிருஷ்ணா, இலங்கை அரசின் நாடாளுமன்றத் தெரிவுக்குழுவையும் ஆதரித்ததோடு, அதில் கூட்டமைப்பினர் பங்குபற்ற வேண்டும் எனவும் கேட்டுள்ளார்.

இந்த இரண்டு விடயங்களிலும் இந்தியாவின் நிலைப்பாட்டைப் பார்க்கையில் கூட்டமைப்புக்கும் இந்தியாவுக்கும் இடையில் முரண் ஏற்பட்டுள்ளது தெரிகின்றது.

நல்லிணக்க ஆணைக்குழு அறிக்கையையும், நாடாளுமன்றத் தெரிவுக்குழுவையும் கூட்டமைப்பு ஏற்கவில்லை. தாயகத் தமிழர்களும் புலம்பெயர் தமிழர்களும் தனித்தனியாக இதே நிலைப்பாட்டில்தான் உள்ளனர்.

இந்தியா இவை இரண்டையும் வரவேற்கின்றது. ஆணைக்குழுவின் சிபார்சுகளை நடைமுறைப்படுத்துமாறும் இலங்கை அரசாங்கத்தைக் கேட்கின்றது.

> பேச்சுவார்த்தையை துரிதமாக நடத்த இலங்கை அரசுக்கு இந்தியா அழுத்தம் கொடுக்க வேண்டும் என்று கூட்டமைப்பினர் கேட்க, அதற்குப் பதிலாக பேச்சுவார்த்தையை இலங்கை எதேச்சாதிகாரமாக முறித்துள்ளது.

பெப்ரவரி 27ஆம் திகதி ஜெனிவாவில் ஆரம்பமாக இருக்கும் ஐ.நா.வின் மனித உரிமைகள் பேரவைக் கூட்டத்தை இலக்கு வைத்து இந்தியா இப்படியான நகர்வுகளை மேற்கொள்வது தெரிகின்றது.

கொழும்பில் தமது சந்திப்புகளை முடித்த பின்னர், வடக்கே சென்ற அமைச்சர் கிருஷ்ணா அங்கு பல நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார். இதனையிட்டுச் செய்தி வெளியிட்டுள்ள தமிழ்நாட்டின் 'தினமணி' பத்திரிகை, அமைச்சர் சுற்றுலாப் பயணம் மேற்கொண்டுள்ளதாக எழுதியுள்ளது.

சுற்றுலா என்பது உல்லாசப் பயணம் என்றும் அர்த்தப்படும். அப்படியானதுவே அவரின் பயணமெனில் தமிழர் ஏதாவது நடக்கும் என்று எதிர்பார்ப்பது மடமை.

யாழ்ப்பாணத்தில் கிருஷ்ணா உரையாற்றுகையில், இன்று இப்பகுதியில் அமைதி நிலை காணப்படுகின்றது என்றும், இப்போது சமாதானம் மலர்ந்துள்ளது என்றும் தெரிவித்திருப்பது தமிழ்ச் சமூகத்தை விசனத்துக்குள்ளாக்கி இருக்கின்றது.

தொடர்ச்சி 43ம் பக்கம்...

## இலங்கைச் செய்திகள்

# 4,300 வடக்கு சிறுவர்கள் சிறார் இல்லங்களில் 9,000 பேர் உறவினர்கள், பாதுகாவலர்களுடன்



வன்னியில் நடந்த மிகக் கொடூர மான போரைத் தொடர்ந்து வடக் குப் பிரதேசம் ஆதரவற்ற சிறுவர்களால் நிரம்பி வழிகின்றது. நாட்டின் வேறு எந்தப் பகுதியிலும் இல்லாத வகை யில் வடக்கிலுள்ள 5 மாவட்டங்களி லும் 4,300 சிறுவர்கள் பராமரிப்பு இல் லங்களில் தங்கவைக்கப்பட்டுள்ளனர். வசதி குறைந்த பெற்றோரால் சிறுவர் இல்லங்களில் சேர்க்கப்பட்டுள்ள சிறு வர்கள் இவர்களுள் அடங்கவில்லை.

நாட்டிலேயே அதிகூடிய சிறுவர் இல்லங்கள் இயங்கும் பிரதேசமாக வும் வடபகுதியே உள்ளது. 91 சிறுவர் இல்லங்கள் இங்கு இயங்குகின்றன. முறைப்படியான அனுமதி பெற்றுப் பதிவு செய்யப்படாத 44 இல்லங்களும் அவற்றினுள் அடக்கம்.

சிறுவர் இல்லங்களில் தங்க வைக் கப்பட்டுள்ள சிறுவர்களில் 729 பேர் தாய், தந்தை இருவரையும் இழந் துள்ளனர். மீதி 3,600 பேரும் தாய் அல் லது தந்தையில் ஒருவரை இழந்துள் ளனர்.

இவர்களுக்கு மேலதிகமாக 9,678 சிறுவர்கள் அவர்களது உறவினர்கள் மற்றும் பாதுகாவலர்கள் வசம் ஒப் படைக்கப்பட்டுள்ளார்கள். இவர்களில் 1,366 பேர் தாய், தந்தை இருவரையும் இழந்தவர்களாவர். மீதி 8,312 பேர் தாய் அல்லது தந்தையில் ஒருவரை இழந்துள்ளனர்.

இந்தச் சிறுவர்களில் 80 விழுக் காட்டிற்கும் அதிகமானவர்கள் போர் காரணமாகவே தமது பெற்றோரை இழந்து நிராதரவான நிலைக்கு வந் துள்ளனர்.

## பேச்சுத் தடைப்பட்டுள்ள போதும் தீர்வு வரும் என நம்பும் இந்தியா

### - அதிகாரப் பகிர்வுக்கு யாழில் வலியுறுத்தல்

தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடனான பேச்சை முன்னறிவித்தல் ஏதுமின்றி இலங்கை அரசு இடை நிறுத்தியுள்ள நிலையிலும் அந்தப் பேச்சின் ஊடாக அர்த்தமுள்ள அதிகாரப் பகிர்வு ஒன்று எட்டப்படும் என்று இந்தியா நம்பிக்கை வெளியிட்டுள்ளது.

"நடந்து கொண்டிருக்கும் பேச்சின் ஊடாக, 13ஆவது திருத்தத் தின் அடிப்படையில் ஓர் அர்த்தமுள்ள அதிகாரப் பகிர்வுப் பொதியை உருவாக்கி, அதன் மூலம் நாட்டின் அரசியல் தீர்வுக்குத் தேவையானதொரு சூழலை உருவாக்கும் என்பது நம்பிக்கை" என்று யாழ். நகரில் உரையாற்றிய இந்திய வெளியுறவுத்துறை அமைச்சர் கிருஷ்ணா தெரிவித்தார்.

பேச்சு மூலம் தீர்வு காண்பதற்குத் தேவையான எல்லா உதவி களையும் இந்தியா செய்யும் என்றும் அவர் கூறினார். அதேவேளை, "இலங்கை அரசும், வடமாகாண மக்களும் மேற்கொள்ளும் சகல மீள்கட்டமைப்பு முயற்சிகளிலும் இந்திய அரசும் இந்திய மக்களும் தோளோடு தோள்கொடுத்து நிற்பர்" என்றார் கிருஷ்ணா.

"அமைச்சர் பீரிசும் நானும் 260 மில்லியன் அமெரிக்க டொலர் கள் செலவில் 49,000 வீடுகளை அமைப்பதற்கான புரிந்துணர்வு ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்டோம். இந்தச் செயற்றிட்டத்தின் கீழ் வரும் மிகுதி வீடுகள் இவை. ஐந்து மாவட்டங்களிலும் 10,000 சைக் கிள்களை விநியோகிப்பதற்கான செயற்றிட்டம் இடம்பெயர்ந்தோரின் வருகையைத் தீவிரப்படுத்தும்.

வடமாகாண மக்களுக்கும் முக்கியமாக யாழ்ப்பாண மக்களுக் கும் தென்னிந்திய மக்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு.

காங்கேசன்துறைத் துறைமுகத்தில் கப்பற் சிதைவுகளை அகற் றும் பணிகள் 19 மில்லியன் அமெரிக்க டொலர் செலவில் செய்து முடிக்கப்பட்டுள்ளமையை நான் மகிழ்ச்சியடைகிறேன்" என்றார்.

ooooooooooooooo

## தேசியப் பிரச்சினைக்குத் தீர்வுகாண செனட் சபை

இலங்கையில் காணப்படும் தேசியப் பிரச்சினைக்குத் தீர்வு காணும் முகமாக செனட் சபை ஒன்று அமைக்கப்படவுள்ளதாக அமைச்சரவைப் பேச்சாளரும் அமைச்சருமான ஹெகலிய ரம் புக்வெல்ல கொழும்பில் இடம்பெற்ற அமைச்சரவை முடிவுகளை அறிவிக்கும் ஊடகவியலாளர் சந்திப்பின்போது தெரிவித்தார்.

மத்திய அரசுக்கும் மாகாண சபைகளுக்கும் இடையில் இணக் கப்பாடொன்றை ஏற்படுத்தும் நோக்கிலும், சிறுபான்மை இனங் களின் பிரதிநிதிகளை உள்வாங்கும் நோக்கிலுமே இந்த செனட் சபை அமையவுள்ளது. அத்துடன், உலக நாடுகளுடன் ஒப்பிடும் போது இலங்கை சிறந்தவொரு ஜனநாயகம் நிலவுகின்ற நாடு என வும் ஹெகலிய இதன்போது குறிப்பிட்டார்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு கோருகின்ற காவற்றுறை மற்றும் காணி அதிகாரங்கள் குறித்த அரசின் நிலைப்பாடு ஏற்கனவே தெளிவுபடுத்தப்பட்டுள்ளதாகவும் அவர் சுட்டிக்காட்டினார்.

## கலாம் ஏன் அவசரமாக வருகிறார்?

### சரவணபவன் நா. உ. கேள்வி



இந்தியா மீது தமிழர்கள் முற்று முழுதாக அவநம்பிக்கை அடைந் துள்ள இன்று, அப்துல்கலாம் ஏன் அவசரமாக யாழ்ப்பாணம் வருகிறார்? அவர் வந்து சென்ற பின்னராவது ஈழத்தமிழர் தொடர்பான இந்திய நிலைப்பாட்டில் மாற்றம் ஏதாவது ஏற்படுமா? சோனியா காந்தி உள் ளிட்ட இந்தியத் தலைவர்களிடம் கலாம் இங்குள்ள தமிழ் மக்களின் உண்மையான உணர்வுகளை எடுத் துரைப்பாரா? இவ்வாறு கேள்விகளை அடுக்கினார் நாடாளுமன்ற உறுப்பி னர் ஈ.சரவணபவன்.

முன்னாள் ஜனாதிபதி கலாமின் பயணமும் அவரை ஏன் இந்திய அதி காரிகள் இங்கு அழைத்து வருகிறார் கள்?

தமிழர்கள் கொல்லப்பட்ட போது வாயே திறக்காத கலாம் இப்போது இங்கு வந்து என்ன செய்யப்போகி றார். ஈழத் தமிழருக்காக ஒரு சொட் டுக் கண்ணீர் வடித்திருப்பாரா அவர் என்ற கேள்வி எழுகிறது. இங்கே இப்போ எதைப் பார்க்க வருகிறார் கலாம்?

## ஈரான் மீதான தடைகள்

### சிறிலங்காவுக்கும் அமெரிக்கா எச்சரிக்கை

ஈரான் மீது விதிக்கப்பட்டுள்ள தடைகள் தொடர்பாக சிறிலங்கா அர சுக்கும் அமெரிக்கா எச்சரிக்கை குறிப்பு ஒன்றை அனுப்பியுள்ளதாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

ஈரான் மீது அமெரிக்கா தடை களை விதித்துள்ள நிலையில், ஈரானு டன் நெருங்கிய நட்பு நாடாக விளங் கும் சிறிலங்காவுக்கும் அமெரிக்கா எச்சரிக்கை செய்தி ஒன்றை அனுப்பி யுள்ளது.

ஈரான் மீதான தடைகளை மீறி சிறிலங்கா செயற்படக் கூடாது என்று எச்சரிக்கை செய்யும் வகையிலேயே இந்தக் குறிப்பு அனுப்பப்பட்டுள்ள தாக தெரியவருகிறது.

நாளொன்றுக்கு 40 ஆயிரம் பீப் பாய் மசகு எண்ணெயை ஈரானில் இருந்து இறக்குமதி செய்து சிறி லங்கா சுத்திகரித்து வருகிறது.

அத்துடன் ஈரானுடன் நெருக்க மான இராஜதந்திர மற்றும் வர்த்தகத் தொடர்புகளையும் சிறிலங்கா அர சாங்கம் பேணிவருகிறது.

மகிந்த ராஜபக்சவின் ஆட்சிக் காலத்தில் இந்த உறவுகள் மேலும் வலுப்படுத்தப்பட்டுள்ள நிலையி லேயே, அமெரிக்காவிடம் இருந்து இந்த எச்சரிக்கை விடுக்கப்பட்டுள் ளது.

ஈரான் மீது அண்மையில் விதிக் கப்பட்டுள்ள தடைகள் தொடர்பாக சிறிலங்கா அரசுக்கு அமெரிக்கா அறி வித்துள்ளது என்பதை சிறிலங்காவின் பெற்றோலியத்துறை அமைச்சர் சுசில் பிரேம் ஜெயந்த உறுதிப்படுத்தியுள் ளார்.



களம் + தளம் + புலம் = தாயகம்

# கூட்டமைப்பினர் அறிக்கையும் கிருஷ்ணாவிடு தூதும் நேரில் மோதிக் கொண்டனவா?

- வீ.ஆர்.வரதராஜா -

சதிகாரன் துரியோதனனைச் சந்திக்க கிருஷ்ணர் தூது அனுப்பப்பட்டார். பாண்டவருக்கான நியாயமான சொத்தை அவர்களிடமே திருப்பிக் கொடுக்குமாறு அங்கு அவர் கேட்டார். துரியோதனன் முற்றாக அதனை மறுத்தான். ஐந்து ஊர்களையாவது கொடு என்று கேட்க, அதனையும் அவன் நிராகரித்தான். இறுதியாக ஐந்து வீடுகளையாவது தர வேண்டும் எனக் கேட்டபோதும் மறுப்பே தெரிவிக்கப்பட்டது.

அது மாகாபாரதம் கூறும் கதை. இங்கே நவீன மாகாபாரதம் என்ன கூறுகின்றது என்று பார்ப்போம். சதிகாரன் மகிந்தவிடம் தமிழர்கள் தமக்குச் சொந்தமான தமிழிழத்தைத் தருமாறு கேட்டார்கள். மகிந்த மறுத்துவிட்டார். நாம் பரம்பரையாக வாழ்ந்துவரும் இரண்டு மாநிலங்களையாவது தாருங்கள் என்று கேட்டனர். அதில் சிங்களவரக்கும் பங்குண்டு. எனவே தரமுடியாது என்றார். காணி, காவல் துறை, நிர்வாக அதிகாரங்களையாவது தாருங்கள் என்று தமிழர்கள் கேட்டனர். அதனைக் கொடுத்தால் தான் அங்கு வரும்போது என்னைக் கைது செய்து விடுவீர்கள், அதனால் உங்களுக்கு எதுவும் தரமுடியாது 'போங்கள்' என்று கூறி துரத்திவிட்டார்.

ஆனால் சோனியா காந்தி மகிந்தவிடம் கிருஷ்ணாவை தூது விட்டார். கிருஷ்ணா வந்து மகிந்தவைச் சந்தித்தார். அரசியலமைப்பின் 13வது திருத்தச்சட்டத்தை செயற்படுத்தினால் தமிழர்கள் பிரச்சனைக்குத் தீர்வு கிட்டும் என்றார்.

**கிருஷ்ணாவின் நான்கு நாள் விஜயத்தில் தாயகத் தமிழரின் துயர் தீர்க்க எந்தவொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.**

"அப்படியே செய்கிறேன்" என்று மகிந்த கூறியதுடன் நிற்கவில்லை. அதற்கு அப்பாலும் சென்று அவர்களுக்கு "அதிகாரப்பரவலாக்கலையும் வழங்குவேன்" என கிருஷ்ணாவிடம் உறுதியளித்தார். தமிழ் அகதிகள் அனைவரும் சகல வசதிகளுடனும் மீண்குடியேற்றம் செய்யப்படவேண்டும் என கிருஷ்ணா கேட்க, "அப்படியே ஆகட்டும்" என்றாராம் மகிந்த. கிருஷ்ணா மகிழ்வுடன் ஊடகவியலாளர்களைச் சந்திக்க சென்றுவிட்டார்.

ஆனால், அருகிலிருந்த தம்பி பசில் வியப்புடன் "உண்மையிலேயே தமிழர்களுக்கு அதிகாரப்பரவலாக்கங்களை வழங்கப்போகின்றீர்களா?" என்று கேட்க, மகிந்த கோணங்கிச் சிரிப்புடன் "அதெல்லாம் சும்மா. நான் இதனை பலமுறை சோனியா அம்மாவிடம் தெரிவித்துள்ளேன். இப்போதும் அப்படித்தான். தமிழருக்கு அதிகாரப்பரவலாக்கத்தை வழங்கினால் பௌத்த சிங்களவர் எனக்கு வாக்களிக்க மாட்டார்களே" என்றாராம்.

இந்தியா வெளிநாட்டமைச்சர் கிருஷ்ணா சிறிலங்கா சென்று மகிந்தவை சந்தித்தது தொடர்பான பின்னணி விபரங்கள் இவை. ஆனால், தமிழர் பிரச்சனைக்கு தீர்வு கண்டு விட்டதாக சோனியாவின் தூதுவர் கிருஷ்ணா இந்திய ஊடகங்களிலும், தமிழ் ஊடகங்களிலும் பெரிய எழுத்தில் செய்திகளை வெளியிட்டுள்ளார். ஆனால், சிறிலங்காவின் ஆங்கில சிங்கள ஊடகங்கள் இந்தச் செய்திகளை ஆரவாரப்படுத்தாமல் அடக்கியே வாசித்துள்ளன.

கிருஷ்ணாவின் நான்கு நாள் விஜயத்தில் தாயகத் தமிழரின் துயர் தீர்க்க எந்தவொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. எலும்புத் துண்டுகளை வீசியெறிவதைப்போன்று அங்கொன்றும் இங்கொன்றுமாக காட்டப்பட்ட வீட்டுத் திட்டம், மருத்துவ விடுதித் திட்டம் ஆகியவை குறிப்பிட்டுச் சொல்லக்கூடியளவில் இல்லை. 'யானைப் பசிக்கு சோளப் பொரி' என்பதைப் போல் மிகப் பெரிய அவலத்திற்கு தள்ளப்பட்டுள்ள தமிழர்களை பாதுகாக்க அவலத்தில் தள்ளிய சோனியா காந்தி இதுவரை உருப்படியான எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

ஆனால், அனுப்பப்பட்ட பொருட்கள் அனைத்தையும் சிறிலங்கா இராணுவமே சூறையாடிவிட்டது. தற்போது பத்தாயிரம் துவிச்சக்கர வண்டிகளை அவதிப்பட்ட தமிழருக்கு வழங்குமாறு அனுப்பப்பட்டிருந்தாலும் அவற்றில் 90 சதவீதமானவை இராணுவத்தினரின் கைகளுக்கே சென்றடையும். வெளிநாட்டமைச்சர் வழங்கிய மிகச் சில துவிச்சக்கர வண்டிகள் கூட இராணுவத்தினரால் அனுமதி பெற்றவர்களுக்கே வழங்கப்பட்டுள்ளன.

தமிழர்களுக்கென 49,000 வீடுகள் கட்டிக் கொடுக்கப்படும் ஒப்பந்தம் கூட சிறிலங்காவின் பொறுப்பிலேயே விடப்பட்டுள்ளது. அதனால் வீடுகள் தமிழர்களுக்கு கொடுக்கப்படும் என்ற நம்பிக்கையே அற்றுப்போய்விட்டது. சிறிலங்காவுக்கு இந்தியா மாத்திரமல்ல, உலக நாடுகள் வழங்கிய பெறுமதி மிக்க பொருட்கள் எதுவுமே அவதிப்பட்ட மக்களைச் சென்றடையவில்லை.

இந்தியா தாயகத் தமிழர்களுக்கு நேரில் தமது உதவிகளை வழங்காமல் சிறிலங்கா அரசுக்கூடாக வழங்குவது முதலில் நிறுத்தப்பட வேண்டும். அது தமிழர்களைச் சென்றடையாது என்பது இந்தியாவுக்கும் தெரியும். ஆனால் சிறிலங்கா திருப்தியடையட்டும் என்ற நோக்கமே இந்தியாவுக்கு இருப்பதாகத் தெரிகின்றது.

சிறிலங்கா அரசிற்கும் தமிழ் தேசிய கூட்டமைப்புக்கும் இடையேயான அரசியல் தீர்வு தொடர்பான பேச்சுவார்த்தையின் போது இந்தியா மூன்றாந்தரப்பாக செயற்பட வேண்டும் என யாழ். ஆயர் அருட்திரு சௌந்தர நாயகம் ஆண்டகை கேட்டுள்ளது நல்லதொரு ஆலோசனையாக இருந்தாலும் தற்போதைய சூழ்நிலைக்கு ஏற்றதாக அமையவில்லை. இந்த யோசனையை இரு நாடுகளுமே ஏற்காது. ஆனால் தமிழ் தேசிய கூட்டமைப்பு இதற்கு ஆட்சேபனை தெரிவிக்க மாட்டாது.





இந்தியாவின் சமாதான முயற்சிகள் முன்னாள் பிரதமர் ராஜீவ் காந்தியின் அணுகு முறையால் தோல்விகண்டு விட்டன. அவரின் மனைவி சோனியா காந்தி, ராகுல், பிரியங்கா ஆகியோரால் தாயகத் தமிழர் மீது தொடுக்கப்பட்ட கொடிய யுத்தம் இந்தியாவின் ஒருபக்கச் சார்பு நிலையை தெளிவுபடுத்திவிட்டது. எனவே இவ்விடயத்தில் இனிமேல் இந்தியா அதாவது அதாவது சோனியா காந்தி தலைமையிலான காங்கிரஸ் கட்சி ஆட்சியில் இருக்கும்வரை தமிழருக்கு நடுவண் வகிக்கும் தன்மை யை அது இழந்துவிட்டது என்றே சொல்ல வேண்டும்.

தமிழினத்திற்கே சோனியா துரோகம் செய்துவிட்டார் என்பது அனைத்து தமிழ் இதயங்களினதும் ஓங்காரமாகும். ஆனால், அருட்திரு சௌந்தரநாயகம் அடிகளாரின் நிலையிலிருந்து ஆலோசிக்கும் பொழுது அவதிப்படும் தமிழர்களுக்கு எப்படியும் உதவிட வேண்டும் என்ற தவிப்பு தெரிகின்றது.

ஜனாதிபதியினால் நியமிக்கப்பட்டுள்ள நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கைக்கு தமிழர் தேசிய கூட்டமைப்பு பதில் அளித்துள்ளது. 105 பக்கங்களைக் கொண்ட கூட்டமைப்பின் உத்தியோகபூர்வமான இந்த அறிக்கை இந்திய வெளிநாட்டமைச்சர் கிருஷ்ணாவும், அமெரிக்கவின் முக்கிய அதிகாரிகள் நால்வர் சிறிலங்காவில் இருக்கும்போதே வெளியிடப்பட்டுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது. நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கையை கூட்டமைப்பின் அறிக்கை சகல நிலைகளிலும் நிராகரிப்பதாகவே சுட்டிக்காட்டியுள்ளது.

கிருஷ்ணா கூட்டமைப்பின் அறிக்கையை கொழும்பில் வைத்தே வாசித்து அறிந்து கொண்டுள்ளார். இருப்பினும் அதுகுறித்து கருத்து சொல்லாமல் நல்லிணக்க ஆணைக் குழுவின் அறிக்கையையும், அரசின் மீள்குடியேற்ற நடவடிக்கையையும் அவர் பாராட்டிச் சென்றுள்ளார். கூட்டமைப்பின் காட்டமான அறிக்கையை அவர் சற்றும் எதிர்பார்க்கவில்லை போலும். ஆனாலும் தமிழர் தரப்பில் சிறிலங்காவுக்கு எதிர்ப்பு இருந்தால்தான் அது இந்தியாவை உதவிக்கு அழைக்கும் என்பதில் அவருக்கு உள்ளூர மகிழ்ச்சியும் உண்டு என்று குறிப்பிடப்படுகின்றது.

வடக்கில் குடியியல் நிர்வாகம் இன்றி இராணுவ ஆட்சி நடப்பது ஏன் என்று மக்களும், தமிழ் தேசிய கூட்டமைப்பு நாடாளுமன்ற உறுப்பினர்களும் தொடர்ச்சியாக கேட்டு வருகின்றனர். வலிகாமம் வடக்கு பிரதேச சபையின் அனுமதியுடன் கீரிமலை, சேத்தாங்குளம் பகுதி காடுகளை வெட்டித் துப்பரவு செய்துகொண்டிருந்த மக்களை காவல் துறையினரும் இராணுவத்தினரும் தாக்கியுள்ளனர்.

வடபகுதி இராணுவத் தளபதியின் முன்னனுமதியின்றி துப்பரவுப் பணிகளை மேற்கொள்ளக்கூடாது என்று மக்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. அதேபோன்று பொது மலசலகூடமொன்றை அமைக்க முற்பட்டபோதும் இராணுவம் தலையிட்டு இராணுவத் தளபதியின் உத்தரவு தேவை என்று சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

புதிதாக நடைபெற்ற உள்ளூராட்சி மன்றங்களுக்கான தேர்தலில் வெற்றிபெற்ற மக்கள் பிரதிநிதிகள், தம் கடமைகளைச் செய்ய முற்படும் போதெல்லாம் இராணுவத்தினர் குறுக்கீடு செய்வதாக தமிழ் நாடாளுமன்ற உறுப்பினர்கள் முறையிட்டுள்ளனர். இம்முறையீடுகளை எவரும் காதுகொடுத்து கேட்டதாகத் தெரியவில்லை.

### சென்ற வாரத் தொடர்ச்சி:

மக்கள் விழிப்படைந்து தமது சுய சிந்தனையின் அடிப்படையில் எப்போது முடிவுகளை எடுக்கிறார்களோ அப்போதுதான் அந்தச் சமூகம் வெளிச்சத்திற்குள் வந்துள்ளது என்று பொருள். அடுத்தவரின் பேச்சைக் கேட்டு மகுடிக்கு அடங்கிய பாம்பு போன்று இருந்தால் மற்றவர்கள் ஏளனமாகத்தான் பார்ப்பார்கள். ஒரு காலத்தில் தூணாக நின்று மற்றவர்களின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்த தமிழர்களை ஏறி மிதிப்பதில் புதினம் ஒன்றுமில்லை.

கேரளாவை எடுத்துக்கொண்டால் இவ்விரு துறைகளிலும் அதீத வளர்ச்சி அடைந்துள்ளது. அதன் விளைவாக மலையாளிகள் இந்தியாவின் பல அரச மற்றும் தனியார் துறைகளில் அதிகமாக பங்குபற்றியுள்ளர்கள்.

அரசியல்வாதிகள் போராட்டங்களை அறிவிக்கும் முன்னரே பஞ்சில் பத்திய தீ போன்று தாமே முன்வந்து போராட்டங்களில் பங்குபற்றுவதன் மூலமாக தமது சுய செயற்பாடுகளை நிரூபிக்கிறார்கள். தமிழகத்தை பொறுத்தவரை யார் ஒருவேளை சாப்பாடு போடுகிறார்களோ அவர்கள் பின்னால் சென்று கொடி தூக்குகிறார்கள். மற்றவர்கள் சொன்னால் உட




எழும்.

#### மக்களின் தெளிவற்ற நிலையே பல பிரச்சினைகளுக்கு காரணம்

பழ நெடுமாறன் அவர்கள் மேலும் தனது கட்டுரையில் எழுதியுள்ளதாவது, ‘2009-ஆம் ஆண்டில் ஈழத்தில் விமானக் குண்டு வீச்சுக்கும், பீரங்கித் தாக்குதலுக்கும், சிங்கள ராணுவ வெறியாட்டத்துக்கும் ஆளாகி மூன்று லட்சத்

களின் நேரடி வற்புறுத்தலின் அடிப்படையில் இந்திய நடுவன் அரசை ஈழத்தமிழர் விடுதலைக்கு ஆதரவாக திசை மாற்றி இருக்க முடியும். செய்ய வேண்டியதைச் செய்யாமல் சென்னைக் கடற்கரையில் சாகும்வரை உண்ணாவிரதம் என மூன்று மணி நேர நாடகம் ஒன்றை கலைஞர் அரங்கேற்றினார்.

நெடுமாறன் மேலும் எழுதியுள்ளதாவது, ‘ஈழத் தமிழர்களை மட்டுமா, தமிழக மீனவர்

# தூணாய் நின்ற தமிழன் துரும்பானதற்கான காரணங்கள்

தம்மைத் தாம் மேலிடத்தில் வைத்துக் கொண்டுதான் மற்றவர்களையும் தாம் இருக்கும் இடத்திற்கு உயர்த்த முற்பட வேண்டும். அதைவிடுத்து, தாம் அடித்தளத்தில் இருந்து கொண்டு மற்றவர்களை உயரத்தில் வைக்க விரும்பினால் இவர்களை மற்றவர்கள் ஒருபோதும் மதிக்கமாட்டார்கள். கடந்த பல நூற்றாண்டுகளுக்கு முன்னர்கூட தமிழ் அரசர்கள் தமது சொந்த நலன்களுக்காகவே போராடினார்கள். தாம் அனைவரும் தமிழ் பேசும் இனத்தைச் சேர்ந்தவர்களென்று ஒருபோதும் ஒன்றாக நின்று போராடியதில்லை.

அனலை நிதிஸ் ச. குமாரன்

சேர்ந்து இயங்காத காரணத்தினால் படையெடுத்துவந்த பிற இனத்தைச் சேர்ந்த அரசர்கள் இலகுவாக தமிழ் அரசாட்சிகளைக் கைப்பற்றினார்கள் என்பது வரலாறு. தமிழ் அரசர்களின் ஆதிக்கத்தில் இருந்த தமிழ் புலவர்கள், கவிஞர்கள், எழுத்தாளர்கள், கல்விமான்கள் மற்றும் பொதுமக்கள் தாம் ஆதரித்த அரசர்களின் துதிகளைப் பாடிக்கொண்டேதான் இருந்தார்களே ஒழிய அவர்கள் செய்த பிழைகளைச் சுட்டிக்காட்ட முன்வரவில்லை.

தமது சுக போக வாழ்விற்காக அரசர்களுக்கு மக்கள் ஆதரவாக இருந்தார்கள். மக்கள் தமது பக்கமே என்கிற மமதையில் அரசர்களும் தமது சுய வேலைத்திட்டங்களுக்கே முன்னுரிமை அளித்தார்கள். அக்கால கட்டத்தில் இருந்த நிலையே இன்றும் நிலவுகிறது. உதாரணத்திற்கு தமிழக அரசியலை எடுத்தால் கலைஞர் கருணாநிதிக்கு பின்னால் ஒரு கூட்டம். அவரின் ஆதரவாளர்கள் அவரை துதிபாடுகிறார்கள். கலைஞர் செய்யும் அனைத்து தவறுகளையும் தெரிந்தும் தெரியாமல் அவரைப் போற்றியே உலாவருவார்கள் அவரது ஆதரவாளர்கள். இதைப் போன்றே அனைத்து அரசியல் கட்சிகளின் ஆதரவாளர்களின் நிலையும்.

ஒருவர் குற்றம் செய்தால் அதனைச் சுட்டிக்காட்டுவதன் மூலமாகத்தான் நல்லதொரு சமூகத்தை உருவாக்க முடியும். தவறுகளைச் சுட்டிக்காட்டாமல் இருந்தால் தொடர்ந்தும் அதே தவறுகளைச் செய்துகொண்டே இருப்பார்கள். தாம் ஒரு ஜனநாயக நாட்டில் இருப்பதாக மார்தட்டிக் கொள்ளும் தமிழக மக்கள் ஏன்தான் தமது பேச்சு மற்றும் எழுத்துச் சுதந்திரத்தைக்கூட பாவிக்காமல் இருக்கிறார்களென தெரியாமல் இருக்கிறது. இப்படி இருந்தால் ஆளும் வர்க்கம் ஏழை எளிய மக்களை வஞ்சித்துக்கொண்டே இருப்பார்கள்.

#### கல்வித் துறையில் ஏற்றம் வேண்டும்

எந்தவொரு இனமும் சுயமாக முடிவு எடுக்க வேண்டுமாயின் கல்வியறிவைப் பெற்றிருக்க வேண்டும். பொருளாதார வளர்ச்சி என்பது கல்வி மற்றும் சுகாதாரம் போன்ற விடயங்களின் மூலமாகத்தான் உயர்வு பெறுகிறது. பல்துறை சார் கல்வியறிவு ஒரு மனிதனை சுயமாக சிந்திக்க வழிவகுக்கிறது.

னையே பேருந்துகளை உடைக்கிறார்கள். இப்படியான கீழ்த்தரமான செயற்பாடுகளை செய்பவர்களினால் எப்படி சமூகத்தில் வளர முடியும் என்கிற கேள்வி எழுகிறது.

தமிழக மக்கள் அனைவருமே அடக்குமுறை வாழ்வையே எதிர்நோக்குகிறார்கள் என்று சொல்ல முடியாது. இருப்பினும் தமிழக மக்களின் பெரும்பான்மையினர் சுய புத்தியில் இயங்குபவர்கள் இல்லை என்பதே உண்மை. பழ நெடுமாறன் அவர்கள் தனது கட்டுரையில் எழுதியுள்ளதாவது, ‘தமிழகத்தை வாட்டி வதைத்து வரும் பல்வேறு உயிர்நாடியான பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு வழிதெரியாமல் தமிழன் திகைத்துக் கிடக்கிறான். அவன் தலையில் மிளகாய் அரைக்கும் வேலையை மற்ற மாநிலங்கள் செய்கின்றன. 30 ஆண்டு காலத்துக்கு மேலாக முல்லைப் பெரியாறு அணைப் பிரச்சனை தமிழகத்தின் 5 தென் மாவட்டங்களை அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது. உறுதியாக நிற்கும் முல்லைப் பெரியாறு அணை பலவீனமாக இருக்கிறது என கேரள அரசியல்வாதிகள் இணைந்து, நின்று பொய்மைக் கூப்பாட்டைக் கிளப்பி தமது நோக்கத்தில் வெற்றி பெற்றுவிட்டார்கள்.’

> **வட இந்தியர்கள் என்றுமே தமிழர்களை மதித்ததில்லை. அவர்களுக்கு தமிழர்கள் என்றால் அடிமைகள். தமிழர்கள் அப்படியான கீழ்த்தரமான மனப் பாண்புடனேயே தமது பெற்றோர்களினால் வளர்க்கப்படுகிறார்கள்.**

நெடுமாறனின் கூற்று நூற்றுக்கு நூறு உண்மையே. தமிழர்கள் சுய நினைவற்று இருந்தால் மற்றவர்கள் அவர்களின் தலைகளில் மிளகாய்தான் அரைப்பார்கள். 30 ஆண்டுகளாக இருந்துவரும் அடிப்படை பிரச்சினையைக்கூட தீர்க்க முடியாமல் 40 தமிழக மற்றும் புதுச்சேரி நாடாளுமன்ற உறுப்பினர்கள் இருக்கிறார்கள் என்கிற போது வெட்கமாக இருக்கிறது. தமது குடும்பப் பிரச்சினை என்று வந்துவிட்டால் டெல்லி சென்று மத்திய அரசை வற்புறுத்தி வேலைகளை கச்சிதமாக செய்து முடிக்கும் வல்லமையுடைய தமிழக அரசியல்வாதிகளுக்கு மாநிலத்தின் தேசியப் பிரச்சினைக்கு தீர்வு பெற்றுத்தர முடியாமல் போயுள்ளது என்கிறதை நினைக்கும் போது மனதிற்கு வருத்தமாகத்தான் உள்ளது.

தமிழக மக்கள் கல்வித்துறையில் முன்னேற்றம் கண்டாலே போதும் தம்மை வதைப்பவர்கள் யாரென்று அடையாளம் காண. மக்கள் சுயமாக சிந்திப்பதன் மூலமாகத்தான் நல்லதொரு சமூகத்தை கட்டியெழுப்ப முடியும். அரசியல்வாதிகளுக்கு தேவை பிரச்சினைகள். அதன் மூலமாகத்தான் தமது அரசியல் எதிர்காலத்தை நிர்மாணிக்க முடியும். மக்களின் பிரச்சினைகள் அனைத்தும் தீர்ந்துவிட்டால் எதைச் சொல்லி வாக்குக் கேட்பது என்கிற நிலையே அரசியல்வாதிகளுக்கு



துக்கு மேற்பட்ட தமிழர்கள் தவித்தபோது அவர்களைக் காப்பாற்றத் தமிழகம் எவ்வளவோ போராடியும்கூட மத்திய அரச அலட்சியம் செய்தது. எரியும் நெருப்பில் எண்ணெய் ஊற்றியதுபோல சிங்கள இனவெறி அரசின் கொலைவெறி ராணுவத்துக்கு ஆயுதங்களை அள்ளிக் கொடுத்து இந்திய அரசு துணை நின்றது. இதன் விளைவாக, ஒரு லட்சத்துக்கு மேற்பட்ட தமிழர்கள் பதைக்கப் பதைக்க படுகொலை செய்யப்பட்டார்கள். மூன்று லட்சத்துக்கு மேற்பட்ட தமிழர்கள் முள்வேலி முகாமுக்குள்ளே அடைபட்டுப் போதுமான உணவு, தண்ணீர், மருந்து இல்லாமல் பெரும் துன்பத்துக்கு ஆளானார்கள். இந்திய அரசைத் தடுக்க வேண்டிய தமிழக தி.மு.க. அரசு இரட்டை வேடம் பூண்டது. அப்போது மன்மோகன் சிங்கின் அரசு தி.மு.க.வின் 15 நாடாளுமன்ற உறுப்பினர்களின் தயவில்தான் பதவியில் இருந்தது என்பதுதான் அதைவிடக் கொடுமை.’

நெடுமாறன் அவர்களே தனது கேள்விக்கும் பதிலை அளித்துவிட்டார். 15 நாடாளுமன்ற உறுப்பினர்கள் அன்று பதவி துறந்திருந்தால் இந்திய மத்திய அரசு கவிழ்ந்திருக்கும். இப்படியான ஒரு சூழ்நிலை வந்திருந்தால் எத்தனை கோடி ரூபாய்கள் தேர்தலுக்காக செலவிடப்பட்டிருக்கும் என்பதனை உணர்ந்தாவது ஏதாவது பிரயோசனமான காரியத்தை அன்று நடுவன் அரசு செய்திருக்கும். அத்துடன் அப்படியான ஒரு சூழ்நிலையை அன்றைய காங்கிரஸ் தலைமையிலான அரசு விரும்பவில்லை. அப்படி வந்துவிட்டால் தனது குடும்ப வாரிசுகள் அனைத்துமே கம்பி எண்ண வேண்டிவரும் என்கிறதை உணர்ந்துதான் அன்று கலைஞர் அவர்கள் அப்படியான ஒரு காரியத்தை செய்யவில்லை. ஆக, தமது இனத்தின் விடுதலையை விட தமது குடும்ப பொருளாதார வளர்ச்சியியே முக்கியமென கலைஞர் அவர்கள் கருதினார்.

தமிழக மக்கள் அன்று ஓரணியில் திரண்டு கலைஞருக்கு தக்க பாடத்தை ஜனநாயக விழுமியங்களுக்கு ஏற்றவாறு போராட்டங்களை நடத்தியிருந்தால், கலைஞர் அவர்

களை ஒரேயடியாகக் கைகழுவிவிட்டது மத்திய அரசு. 30 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழக மீனவர்களைச் சிங்களக் கடற்படை வேட்டையாடுகிறது. விரட்டி விரட்டிச் சுடுகிறது. இந்தியக் கடற்படையோ வேடிக்கை பார்க்கிறது. இதுவரை 500-க்கு மேற்பட்ட மீனவர்கள் படுகொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கானவர்கள் அங்கவீனமாக இருக்கிறார்கள். பல கோடி ரூபாய் பெறுமான மீனவர்களின் படகுகள், வலைகள் சேதமாக்கப்பட்டு இருக்கின்றன. இத்தனைக்கும் மௌன சாட்சியாக மத்திய அரசு விளங்குகிறது. உலகில் எந்த நாட்டிலும் கடலில் எல்லை தாண்டினார்கள் என்ற குற்றச்சாட்டின்பேரில் சுட்டுத்தள்ளுவதில்லை. உலகத்திலேயே அவ்வாறு செய்கிற ஒரே நாடு இலங்கைதான். தன்னுடைய குடிமக்கள் கொல்லப்படுவதை வேடிக்கை பார்க்கும் ஒரே நாடும் இந்தியாதான். நமது மீனவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பும் கடமையும் மத்திய அரசுக்கு உண்டு. தமிழ்நாட்டு மீனவர்களை இந்தியக் குடிமக்களாகவே அரசு கருதவில்லை என்று மத்திய அரசில் அங்கம் வகிக்கும் ஒரு தமிழக அமைச்சர்கூட எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை.’

ஒரு உண்மையை மட்டும் அனைவரும் விளங்கிக்கொள்ள வேண்டும். வட இந்தியர்கள் என்றுமே தமிழர்களை மதித்ததில்லை. அவர்களுக்கு தமிழர்கள் என்றால் அடிமைகள். தமிழர்கள் அப்படியான கீழ்த்தரமான மனப் பாண்புடனேயே தமது பெற்றோர்களினால் வளர்க்கப்படுகிறார்கள். வட இந்தியருக்கு இல்லாத திறமை தமிழருக்கு உண்டு. தம்மிடம் எந்த வகையான திறமைகள் இருக்கிறது என்பதை அறியாமல் காலத்தை வீணடிக்கிறார்கள் தமிழக மக்கள் என்பதே உண்மை.

தாம் வாழ்ந்தால் போதும் என்கிற நோக்கிலேயே இருக்கிறார்கள் பல தமிழர்கள். என்று தனது இனம் வளர்ச்சியடையுதோ அன்றுதான் பிற இனத்திவர்களின் செல்வாக்கை தாம் பெறமுடியும் என்கிற வாதத்தை சிந்திககாமல் இருக்கிறார்கள் தமிழர்கள்.

தொடர்ச்சி 23ம் பக்கம்...

# YOUR HOME DOESN'T COME WITH MORTGAGE ADVICE. I DO.



- Purchase Refinance Preapprovals
- Builder rate hold up to 24 months
- Special program for Self employed and New immigrants
- Unlock your equity in your home with RBC Home Line Plan
- Available 7 days a week

## Call now before rate goes up!

As your RBC Mortgage Specialist and a trusted member of our community I can advise you on your options and give you the confidence you need to make the right decisions. I can meet with you at a **place** and **time** that is **convenient** for you.




**Ram Krish**
RBC Royal Bank
Mobile Mortgage Specialist
Direct: **416-849.5363**
Email: ram.krish@rbc.com
* Some conditions apply.



- digi Media -

## RES Home Direct
We make your financial dreams come true...

**Mortgage, Credit & Collection Agency Problem?**

- ❖ வீடுவாங்குவதற்கான முதலாவது இரண்டாவது அடமானக்கடன் வசதிகள்.
- ❖ எல்லாக்கடன்களையும் ஒன்றுபடுத்த அல்லது புதிய சொத்தை வாங்க **Refinance Secured Line** வசதிகள்.
- ❖ புதிய குடிவரவாளர்கள், குறைந்த வருமானம், சுயதொழில் போன்றவர்களுக்கான மோட்கேஜ் வசதிகள்.
- ❖ வியாபார நிலையங்கள் வாங்க, விஸ்தரிக்க, புதிதாகத்திருத்தி அமைக்க கடன் வசதிகள்.
- ❖ சகலவிதமான மோட்கேஜ் தேவைகளுக்கும், தமிழில் உரையாடி இலவச ஆலோசனை பெற அழையுங்கள்.
- ❖ உங்கள் எல்லாக் கடன்களையும் ஒருமுகப்படுத்தி குறிப்பிட்ட தொகையை மட்டும் கட்டும் வசதிகள்.

### RESIDENTIAL
- Residential 1st & 2nd Mortgages.
- Refinance / Transfer / Switch.
- Home equity line of credit.
- Cash back and Private Financing.
- New Immigrant / Self employed /Low income / Poor Credit.
- Power of sale Investment Properties.
- Financing for new custom Built homes.

- ***Bankruptcy, Consumer Proposals.***
- ***Collection Agency Settlements and Debt Consolidation***

### COMMERCIAL
- Commercial mortgages with 10%down of up to $500,000
- Commercial Refinance and Renewel.
- Renovation / Construction Financing
- Business loan for existing and new businesses.
- Start up business and business line of credit.
- New custom built commercial property financing.
- Lease-hold improvements/ Investments.
- You will get the best rate regardless of good or poor credit!

தேர்வாகும் வாடிக்கையாளரிடமிருந்து எதுவிதமான கட்டணமும் அறவிடப்படமாட்டாது
No Fee For Qualify Customer

For all your mortgage need call us...



**T. Antony Ponrajah**
Mortgage Agent Lic # M08004007
**Tel : 416.431.5115**
**Dir : 416.457.0651**
**Fax : : 416.628.3120**

**Find the best rates for your situation**
New Town Sq Builder's Authorized Mortgage Agent
**40 New Delhi, Unit 107A, Markham ON L3S 0B5**

Design by 99print.ca 416 832 0961

**வீடு, வியாபார நிலையங்களை வாங்கவும் விற்கவும் எங்களுடன் தொடர்பு கொள்ளவும்**




# தென்னாபிரிக்காவில் தமிழ்த் தேசியக்கூட்டமைப்பும் உலகத் தமிழர் பேரவையும்

தற்போது தென்னாபிரிக்காவை ஆட்சி செய்யும் ஆபிரிக்க தேசிய காங்கிரஸின் நூற்றாண்டு விழாவில் கலந்து கொள்ள, தமிழ்த் தேசியக் கூட்டமைப்பும் உலகத் தமிழர் பேரவையும் சென்றிருக்கின்றன. வருகிற பெப்ரவரி 27 முதல் மார்ச் 23 வரை, ஐ.நா. மனித உரிமைப் பேரவையின் 19 ஆவது கூட்டத் தொடர் நடைபெறவிருக்கும் நிலையில், இவர்களின் தென்னாபிரிக்க பயணம் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

இந்த நூற்றாண்டு விழாவில் 40 நாடுகளின் தலைவர்களும் போராட்டத்திற்கு ஆதரவளித்த அமைப்புகளும் கலந்து கொள்கின்றன. இதில் ஏறத்தாழ 120,000 பேர் பங்குபற்றுகிறார்கள். தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் சார்பில் அதன் நாடாளுமன்றக் குழுத் தலைவர் இரா. சம்பந்தன், சுரேஷ் பிரேமச்சந்திரன், செல்வம் அடைக்கலநாதன் மற்றும் நியமன எம்.பி. சுமந்திரனும் அங்கு சென்றுள்ளார்கள். புலம்பெயர் நாட்டில் இயங்கும் உலகத் தமிழர் பேரவையின் சார்பாக அதன் தலைவர் இமானுவேல் அடிகளாரும் அமைப்பின் உத்தியோகபூர்வ பேச்சாளர் சுரேன் சுரேந்திரனும் கலந்து கொள்கின்றார்கள்.

**இதயச்சந்திரன்**

ஏற்கனவே அங்கு வருகை தந்த பல தரப்பினரோடு, இந்த இரண்டு அமைப்பினரும் பேச்சுவார்த்தையில் ஈடுபட்டதாக செய்திகள் தெரிவிக்கின்றன. அத்தோடு தமிழ் பேசும் மக்களின் அரசியல் உரிமை மற்றும் போர்க் குற்ற விசாரணை தொடர்பாக அங்கு பிரசன்னமாகியிருக்கும் தலைவர்களுக்கும், அமைப்புகளுக்கும் தமிழர் தரப்பினர் தெளிவுபடுத்துவார்களென்கிற நம்பிக்கை பலரிடம் காணப்படுகிறது. அதேவேளை, 14 ஆபிரிக்க நாடுகளின் பிரதிநிதிகளை கூட்டமைப்பினர் சந்தித்து பேச்சுவார்த்தையில் ஈடுபட்டதாகவும் செய்தி வந்தது.

ஆயினும் மார்ச்சில் நடைபெறும் ஐ.நா. சபையின் 19 ஆவது கூட்டத் தொடரில் பங்குபற்றும் 13 ஆபிரிக்க நாடுகளைச் சார்ந்த பிரதிநிதிகளை இவர்கள் நிச்சயம் சந்தித்திருப்பார்களென்று நம்பலாம்.

அத்தோடு, இலங்கை அரசின் உத்தியோகபூர்வ உயர்மட்டக் குழுவினர் இவ்விழாவில் கலந்து கொள்ளவில்லையென்கிற செய்தியும் வருகிறது. இமானுவல் அடிகளாரை தலைவராகக் கொண்டியங்கும் உலக தமிழர் பேரவைக்கு இம்மாநாட்டில் சிறப்புப் பார்வையாளர் அந்தஸ்தினை ஆபிரிக்க தேசிய காங்கிரஸ் வழங்கிவிட்டதால் இப்புறக்கணிப்பு நிகழ்ந்ததாகக் கூறப்படுவதில் உண்மை உண்டு.

ஏனெனில் சுயாதீன சர்வதேச விசாரணை ஒன்றிற்கான பரப்புரையில் உலகத் தமிழர் பேரவை ஈடுபடும் என்பதனை இலங்கை அரசு நிச்சயம் புரிந்து கொள்ளும். ஆகவே சர்வதேச புலிகள், இலங்கைக்கு எதிராகச் செயற்படுகிறார்களென்று அடிக்கடி அறிக்கை விடும் அரசு, பேரவை கலந்து கொள்ளும் களத்தில் இணைந்து கொள்ளாதென்பதை இலகுவாக ஊகிக்க முடியும்.

ஆயுதப் போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் மட்டுமல்லாது, சுய நிர்ணய உரிமை, இன ஒழிப்பு, போர்க்குற்ற விசாரணை என்கிற ஒவ்வாத விவகாரங்களை தூக்கிப் பிடிப்பவர்களும் இலங்கை ஆட்சியாளர்களைப் பொறுத்தவரை பயங்கரவாதிகளே. காணி, காவல்துறை உரிமைகளைக் கேட்கும் கூட்டமைப்பைத் தடை செய்ய வேண்டுமென, அண்மைக் காலமாக எழும் குரல்களும், நாளை கூட்டமைப்பை பயங்கரவாதிகளென்று சொன்னால் ஆச்சரியப்பட முடியாது. ஒருபடி மேலே சென்று, நாடாளுமன்றத் தெரிவுக் குழுவிற்குள் இணையாவிட்டால் தடை செய்வோம் என்றும் கூறுவார்கள்.

அமெரிக்க இராஜாங்க திணைக்களத்தின் அழைப்பை ஏற்று கூட்டமைப்பினர் அமெரிக்க சென்ற வேளையிலும் தென்னிலங்கையில் பேரினவாத அதிர்வேட்டுகள் ஒலித்தன. தென்னாபிரிக்க பயணத்தின் பின்னர், இது மேலும் அதிகரிக்கும் வாய்ப்புமுண்டு.

> தென்னாபிரிக்க மக்களின் போராட்ட அனுபவங்களை, நில ஆக்கிரமிப்பிற்கெதிராக அவர்கள் முன்னெடுத்த ஐக்கியப்பட்ட வழிமுறைகளை, ஒடுக்கப்படும் மக்கள் சமூகம் கவனித்தல் வேண்டும்.

அதேவேளை, இந்த மாநாட்டின் முக்கியமையப் புள்ளியாகக் கருதப்படும் ஆபிரிக்க தேசிய காங்கிரஸின் வரலாறு குறித்து சுருக்கமாகப் பார்க்க வேண்டும். ஏனெனில் தமிழ் பேசும் மக்களின் போராட்டத்திற்கும் தென்னாபிரிக்க மக்களின் நிறவெறிக்கெதிரான விடுதலைப் போராட்டத்திற்குமிடையேயான அடிப்படைக் காரணிகள் குறித்த விடயங்களில் ஒற்றுமை காணப்படுகிறது.

ஒல்லாந்திலிருந்து வெள்ளையின குடியேற்றவாசிகள் 1652 இல் தென்னாபிரிக்காவிற்குள் நுழைந்ததிலிருந்து ஆரம்பமாகிறது இந்த கொலனியாதிக்கம். 1860 ஆம் ஆண்டு அங்கு பிரித்தானியர் வரும் வரை, ஒல்லாந்தர்களுக்கும் தென்னாபிரிக்க பூர்வீக குடிகளுக்குமிடையே நிலம் மற்றும் கால்நடை தொடர்பாக கசப்பான யுத்தங்கள் நடைபெற்றன. நவீன துப்பாக்கிகள், பீரங்கிகள், குதிரைகள் சகிதம் வந்திறங்கிய பிரித்தானியர், 1878 ஆம் ஆண்டளவில் முழு தென்னாபிரிக்காவையும் பெரும் யுத்தம் ஊடாகக் கைப்பற்றினார்கள். இருப்பினும் 1860 இல் வருகை தந்த பிரித்தானியர், 1867 இல் வைரத்தையும் 1886 இல் தங்கத்தையும் கண்டு பிடித்தார்கள்.

மூலவளச் சுரண்டலில் ஈடுபட்ட சுரங்க முதலாளிகளுக்கு அதில் பணிபுரிய ஏராளமான தொழிலாளர்கள் தேவைப்பட்டார்கள்.

அந்த மண்ணின் மைந்தர்கள் கூலிகளாக்கப்பட்டதோடு, ஒடுக்குமுறைக்கெதிரான போராட்டமும் அங்கிருந்து ஆரம்பமானது. இந்நிலையில் 1911 ஆம் ஆண்டு பிக்ஸ்லி கா இசாகா செமி என்கிற விடுதலைப் போராளி, பழைய வேறுபாடுகளை மறந்து, ஒரு தேசிய இயக்கமொன்றின் கீழ் அனைவரும் ஓரணியில் திரள வேண்டுமென தென்னாபிரிக்க மக்களை நோக்கி அறை கூவல் விடுக்கின்றார்.

"நாமனைவரும் ஒரு தேசமக்கள். எமக்கிடையே நிலவும், பிளவுகளும் பொறாமைக் குணமுமே எமது இன்றைய துன்பகரமான நிலைக்குக் காரணம்" என்று 'இசாகா செமி' மக்களிடம் உரத்துக் கூறினார்.

அவரின் பிரகடனம், மக்களைச் சென்றடைந்தது. இனக் குழுமங்களின் தலைவர்கள் மக்கள் குழுக்களின் பிரதிநிதிகள், கத்தோலிக்க திருச்சபைகள் மற்றும் தனி நபர்கள் ஒன்றுகூடி 1912 ஆம் ஆண்டு ஜனவரி 8 ஆம் திகதியன்று ஒடுக்குமுறைக்கெதிரான மக்கள் இயக்கமான ஆபிரிக்க தேசிய காங்கிரஸை நிறுவினார்கள்.

1913 இல் பிரித்தானியரால் கொண்டு வரப்பட்ட மிக மோசமான காணிச் சட்டமானது, காங்கிரஸின் போராட்ட முனைப்பினை மேலும் வலுவடையச் செய்தது. இவர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களைத் தவிர்த்து ஏனைய இடங்களை ஆபிரிக்கரால் வாங்கவோ அல்லது வாடகைக்கு விடவோ முடியாத சரத்தினை அக்கொடூரச் சட்டம்கொண்டிருந்தது.



நீண்ட காலத்தின் பின்னர் 1961 இல் ஆயுதப் போராட்டம் தோற்றம் பெற்று, இறுதியில் 1994 மே மாதம் தென்னாபிரிக்காவின் அதிபராக நெல்சன் மண்டேலா பதவியேற்றது வரையான நிகழ்வுகள், அண்மைக் கால வரலாறாகப் பதிவாகியுள்ளது.

அங்கு நில ஆக்கிரமிப்பும், மூலவளச் சுரண்டலுமே ஒடுக்குமுறையின் பிரதான வடிவங்களாக இருப்பதைக் காண்கிறோம். அதுபோன்று இலங்கை 1948 இல் சுதந்திரமடைந்த காலம் முதல் நிலத்திற்கும் மக்களுக்குமிடையிலான பிரதான முரண்பாடே இன முரண் நிலையை உருவாக்கிய அடிப்படைக் காரணியாகவிருப்பதை கல்லோயாவிலிருந்து மன்னார் மாவட்ட நரிக்காட்டு பிரதேசம் வரை காணலாம்.

இருப்பினும் தரப்படுத்தல், மொழி மறுப்பு போன்ற ஒடுக்குமுறைகள், பேரினவாதத்தால் தமிழினத்தின் மீது மேலதிகமாக மேற்கொள்ளப்பட்ட கலாச்சார பண்பாட்டு வாழ்நிலை இனவழிப்பின் பக்கங்களே.

தென்னாபிரிக்கா போன்று, இலங்கையை ஆண்ட பிரித்தானியர், 1840 ஆம் ஆண்டு இலக்கம் 12 மற்றும் 1841 ஆம் ஆண்டு இலக்கம் 9, ஆகிய காணி சட்டங்கள் ஊடாக பெருந்தோட்டப் பயிர் செய்கை முதலீட்டாளர்களுக்கு சட்டபூர்வ உரித்துடைய காணி உரிமையை வழங்கியிருந்தார்கள்.

ஆகவே, கொலனியாதிக்க காலத்தில் மட்டுமல்லாது, சுதந்திரமடைந்த காலத்திலும் ஏகாதிபத்தியங்களும் பேரினவாத ஆட்சியாளர்களும் நிலத்தைப் பறிக்கும் வேலையில் தான் முதலில் இறங்குகின்றார்கள் என்பது தான் உண்மை.

குறிப்பாக காலஞ்சென்ற காமினி திசாநாயக்கவின் நில ஆக்கிரமிப்பு கருத்தியலின் உச்ச வடிவமான மகாவலி அபிவிருத்தித் திட்டம், கிழக்கின் நல்ல நில வளங்களையும் நீர் வளங்களையும் விழுங்கி அங்கு பெரும்பான்மையாக வாழும் தமிழ், முஸ்லிம் சமூகங்களிடையே நிலம் சார்ந்த பகை முரண்பாடுகளை உருவாக்கியிருந்ததைப் பார்க்கலாம்.

உதாரணமாக 24 சதவீத முஸ்லிம்கள் வாழும் கிழக்கில் 2 வீத நிலங்களே அவர்கள் வசமிருப்பதாக புள்ளி விபரங்களோடு கவலைப்படுபவர்கள், அந்த தமிழ் பேசும் மக்களுக்குச் சொந்தமான நிலம், திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களால் அபகரிக்கப்பட்ட விடயத்தை குறிப்பிட மறந்து விடுகிறார்கள்.

ஆகவே, விடுதலையடைந்து நூற்றாண்டு விழா காணும் தென்னாபிரிக்க மக்கள் சந்தித்த சவால்கள், நில ஆக்கிரமிப்பினூடாக மேற்கொள்ளப்பட்ட ஒடுக்குமுறைகளை அவர்கள் எவ்வாறு ஒன்றுபட்டு எதிர்கொண்டார்கள் என்பவற்றை தமிழ் பேசும் மக்களாகிய முஸ்லிம்களும் தமிழர்களும் புரிந்து கொள்ள வேண்டுமென்பதே சமுதாய நலன் விரும்பிகளின் பேரவாவாக இருக்கிறது.

ஒடுக்கப்படும் இனங்களிடையே பிளவினை ஏற்படுத்தி, அந்த பிளவுபட்ட இயங்குதளத்தை தொடர்ந்தும் தக்க வைப்பதற்கே ஒடுக்குமுறையாளர் முயற்சிப்பார்கள். சலுகைகள் ஒரு சிலரின் பணப் பையை பெருக்க வைக்கும். ஆனால் சலுகை செய்வோன், மக்களின் நிலங்களையே விழுங்கி விடுவான்.

ஆப்கானிஸ்தானில் நடைபெறும் போர் வெறுமனே தலிபான்களுக்கு எதிரான போரென்று தப்புக் கணக்கு போட்டு விடக்கூடாது. ஒரு ரில்லியன் அமெரிக்க டொலர் (1000 பில்லியன் டொலர்) பெறுமதியான கனிமங்கள் அம் மண்ணில் புதைந்திருக்கின்றன. ஈராக்கில் அழிவாயுதங்களைத் தேடிப் போனவர்கள், கிட்டத்தட்ட 142,000 மக்களை அழித்து இப்போது எண்ணெயோடு வருகிறார்கள்.

பலஸ்தீனத்திலும் சியோனிச யூதர்களின் நில ஆக்கிரமிப்பினால் பலஸ்தீன தேசம் சிறுத்துவிட்டது. குடியேற்றங்களை அகற்றாமல் பேச்சுவார்த்தை இல்லை என்றாகிவிட்டது. இவை தவிர உலக மயமாதல், தாராண்மைவாத சந்தைப் பொருளாதாரம் என்கிற முதலாளித்துவ கருத்துருவங்கள் உதிர்ந்து போகும் நிலையை எட்டுவதனால், அதன் இருப்பினைத் தக்க வைக்க முதலீட்டுக்கான களங்கள் இடம்மாறுவதைப் பார்க்கலாம்.

நவகாலனித்துவத்தின் புதிய பரிமாணமாக பன்னாட்டுக் கம்பனிகள் நிலங்களை ஆக்கிரமிக்க வருகின்றன.

சிறுபான்மைத் தேசிய இனங்களின் நிலங்களை பெருந்தேசியவாத ஆட்சியாளர்கள் அபகரிப்பது போன்று, முழு தேசத்தின் நிலங்களையும் மூல வளங்களையும் பங்கு போட ஏகாதிபத்தியங்கள் முனைகின்றன.

ஆகவே, தென்னாபிரிக்க மக்களின் போராட்ட அனுபவங்களை, நில ஆக்கிரமிப்பிற்கெதிராக அவர்கள் முன்னெடுத்த ஐக்கியப்பட்ட வழிமுறைகளை, ஒடுக்கப்படும் மக்கள் சமூகம் கவனித்தல் வேண்டும்.

ஆதரவு திரட்டச் சென்ற இடத்தில் எமக்குப்பொருத்தமான, கருத்திற் கொள்ள வேண்டிய பல வரலாற்றுப் பதிவுகள் உண்டு.

## கனடா தமிழ் வர்த்தக சம்மேளனத்தின் ஊடகங்களை ஒருங்கிணைத்த ஒன்றுகூடல்!



கனடா தமிழ் வர்த்தகர்களின் நலனுக்காகவும், அவர்களது வர்த்தக மேம்பாட்டுக்காகவும் கடந்த 20 ஆண்டுகளுக்கு மேலாக செயற்பட்டு வரும் கனடா தமிழ் வர்த்தக சம்மேளனம் ரொறன்ரோவில் உள்ள அனைத்து கனடிய தமிழ், ஊடகவியலாளர்கள் அனைவரையும் ஒன்றாக அழைத்து கனடா தமிழ் வர்த்தக சம்மேளனத்தின் செயற்பாடுகள் பற்றிய விளக்கமளித்தல் மற்றும் ஊடகங்களுக்கு நன்றி தெரிவிப்பு ஒன்று கூடலை ஸ்காபுறோ "காரைக்குடி" உணவகத்தில் புதன் கிழமை (18-01-2012) மாலை ஏற்பாடு செய்திருந்தார்கள்.

அந்நிகழ்வில் பங்குபற்றிய ஊடகவியலாளர்களும், கனடா தமிழ் வர்த்தக சம்மேளனத்தின் நிர்வாக சபை உறுப்பினர்களையும் இங்கேயுள்ள படத்தில் காணலாம் - படம் கனா (நினைவுகள் இணையம்)

வீடு, வர்த்தக நிலையங்கள் வாங்க மிக குறைந்த கொமிசனில், மிகவிரைவில் விற்க அழையுங்கள்...

உதயன் பொன்னுத்துரை Broker

**Looking For a Great Realtor ? Look No Further!**




101 Dunsfold
$349,900
3+2 BedRooms

# Sold



2301 Derry Rd West
2Bed + Balcony ;
**Mississauga
$117,800

3 Kitchen + 3 Wsrms



69Wyevalley
Kennedy / Lawrence
$439900
Open House SAT + SUN 2 to 5 PM




33Riazal $469,900
9th / 14th Makham

# SOLD

Win Timber
th / Reeves
Brand New Home
$438900

**Reduced !!!**



**4455 Sheppard Ave E 2**
**Conv Store $113,900**



**Restaurant for Sale in Oshawa Over 40 Yrs in business $149,900**



**Sunny Brook Restaurant**
**660 Eglinton Ave $159,800**
**Over 25 Yrs in Business**

# Sold



**4 Denham Rd $439,900**
**3Bdrm+3Bdrm Bsmt APT**
**Kennedy/ N of Lawrence**



11 Goodmark Pl #1
Steeles/Hwy 427 $675,000
5,551 Sq Ft
Automotive Allowed



3838 Midland Ave
Unit 201 + 202
Office Space $288,888




$64,900
Restaurant in Osh
19 King St W

Not Intended to solicit properties currently listed by other realtors.



119 McNicol Ave For RENT



Top 5% HomeLife/Canada 2005 to 2010
Chairman Club 2010

#1 Producer at (*), For Years
2004 + 2005 + 2006 + 2007 + 2008 + 2009 + 2010

Utayan Ponnuthurai,BSc(Hons)
Real Estate Broker

**HOMELIFE/CHAMPIONS REALTY INC.,Brokerage ***
*Independently owned and operated

**Office: 416-281-8090**

**Direct: 416-505-2120**
www.TorontoRealHome.com




INDEPENDENTLY OWNED AND OPERATED

Now Hiring ...
New or Experienced mortgage Agents to do the Right Mortgage with the Right Broker.
Attractive Commission split,... up to 100 %




Access Inc.

Utayan Ponnuthurai, AMP
Principal Broker
Lic #: 11404

INDEPENDENTLY OWNED AND OPERATED

# மகிந்தவுடன் தைப்பொங்கல் கொண்டாடினார் எஸ்.எம்.கிருஸ்ணா



சிறிலங்காவுக்கு பயணம் மேற்கொண்டுள்ள இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம்.கிருஸ்ணா அலரி மாளிகையில் சிறிலங்கா அதிபர் மகிந்த ராஜபக்சவுடன் இணைந்து தைப்பொங்கல் விழாவைக் கொண்டாடியுள்ளார்.

இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம்.கிருஸ்ணா நான்கு நாள் பயணத்தை மேற்கொண்டு சிறிலங்கா சென்றிருந்தார்.

அலரி மாளிகைக்குச் சென்ற இந்திய வெளிவிவகார அமைச்சர் அங்கு ஏற்பாடு செய்யப்பட்ட தைப்பொங்கல் விழாவில் சிறிலங்கா அதிபர் மகிந்த ராஜபக்சவுடன் இணைந்து பங்கேற்றார்.

இதன்போது பொங்கல் பானையில் அரிசியிட்ட எஸ்.எம்.கிருஸ்ணா அங்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கலை நிகழ்வுகளையும் கண்டு ரசித்தார்.

*மக்கள் திண்டாட்டம் அமைச்சர்கள் கொண்டாட்டம்...*

# நல்லிணக்க ஆணைக்குழுவின் பரிந்துரைகளை செயற்படுத்த இலங்கை அரசு இணக்கம் கிருஷ்ணா



இலங்கை இனப்பிரச்சினை தீர்விற்கு 13வது திருத்தச் சட்டத்தை முழுமையாக அமுல்படுத்துவதாக இலங்கை ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச தன்னிடம் உறுதியளித்துள்ளதாக இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஸ்ணா தெரிவித்தார்.

இலங்கை வெளிவிவகார அமைச்சருக்கும் இந்திய வெளிவிவகார அமைச்சருக்கும் இடையில்இடம்பெற்ற சந்திப்பினையடுத்து நடைபெற்ற செய்தியாளர் சந்திப்பிலேயே அவர் இவ்வாறு தெரிவித்துள்ளார்.

*இதை நம்பிறீங்களா கிருஷ்ணா அல்லது நடிக்கிறீங்களா?*

# அதிகாரப்பகிர்வு வழங்கப்படவேண்டும் என்பதே இந்தியாவின் நிலைப்பாடு

## எஸ்.எம். கிருஷ்ணா மகிந்தவிடம் தெரிவிப்பு



தமிழர் தாயகப் பிரதேசங்களில் தமிழர்களுக்கான அதிகாரப்பகிர்வு வழங்கப்படவேண்டும் என்பதே இந்தியாவின் நிலைப்பாடு என இலங்கை சென்றிருக்கும் இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணா தெரிவித்துள்ளார். உத்தியோகபூர்வ விஜயம் மேற்கொண்டு இலங்கை சென்றுள்ள இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம்.கிருஷ்ணா இலங்கை ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவைச் சந்தித்தபோதே இதனை அவர் தெரிவித்தார்.

*கிருஷ்ணா நீங்க உங்கபாட்டுக்குச் சொல்லலாம். ஆனால் அவங்க செய்யணுமே...!*

# பயங்கரவாதம் முடிவுக்கு வந்துவிட்டது என நினைக்க வேண்டாம் கோதபாய



பயங்கரவாதம் முடிவுக்கு கொண்டு வரப்பட்டது, இதனால், பயங்கரவாத பிரச்சினை முடிவுக்கு வந்து விட்டது என நினைக்க வேண்டாம் என பாதுகாப்புச் செயலாளர் கோதபாய ராஜபக்ச தெரிவித்துள்ளார்.

உயிர் தியாகங்களை செய்து பெறப்பட்ட அமைதியை அழிக்க சில சக்திகள் முயற்சித்து வருவதாகவும் அவர் மேலும் கூறியுள்ளார்.

*நாட்டில பயங்கரவாதம் முடிவுக்கு வராது. ஏனென்றால் நிதானய்யா பயங்கரவாதி!*

# நறுக்கென

# இந்திய அரசின் கடமை வாக்குறுதி வாங்குவது அல்ல; தீர்வை பெற்று அதை நடைமுறை படுத்துவதே மனோ கணேசன்



இலங்கை அரசாங்கத்திற்கு போர் நடத்த உதவி செய்த இந்தியா, சீனா, பாகிஸ்தான், ரஷ்யா ஆகிய நான்கு முக்கிய நாடுகளிலும் அதிகார பரவலாக்கல் இருக்கிறது.

13ம் திருத்தத்தை கடக்கும் தீர்விற்கு உடன்படுவதாக ஜனாதிபதி இந்திய அரசிடம் உறுதி அளித்துள்ளதாக செய்தி வெளியாகி உள்ளது. இதை கேட்டு நாம் மகிழ்ச்சி ஆரவாரம் செய்ய முடியாது. பட்டாசு கொளுத்த முடியாது. இத்தகைய எத்தனையோ வாக்குறுதிகளை நாம் கேட்டு பழக்கப்பட்டவர்கள்.

கையெழுத்து போட்டு தந்துவிட்டு பிறகு மத குருமார்களிடம் ஒப்பந்த ஆவணத்தை கிழித்து கொடுத்ததை நாம் பார்த்துள்ளோம். பாராளுமன்றில் தீர்வு பொதி ஆவணத்தை தீ வைத்து எரித்த காட்சியையும் நாம் பார்த்துள்ளோம்.

இந்திய அரசின் கடமை வாக்குறுதி வாங்கிதருவது அல்ல. தீர்வை பெற்று அதை நடைமுறை ஆக்குவதே இந்தியா செய்ய வேண்டியது ஆகும். இது ஏதோ தமிழர்களுக்கு செய்யும் விசேட சலுகை என கருத முடியாது. இனி ஒரு முறை இந்திய அரசின் தலைவர் இலங்கை வந்து இதே மாதிரி வாக்குறுதி வாங்கி கொடுக்கும் நிலைமை ஏற்படக் கூடாது என மனோ கணேசன் தெரிவித்துள்ளார்.

*உள்ளதை சொல்றீங்க கணேசன்...*

# இலங்கை இனப்பிரச்சினைக்கு நிரந்தர தீர்வுகாண முடியுமென இந்தியா நம்பிக்கை



இலங்கை இனப்பிரச்சினைக்கு நிரந்தர தீர்வு காண முடியும் என இந்தியா நம்புவதாக தமிழ் தேசியக் கூட்டமைப்பிடம் இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணா கூறியதாக தகவலறிந்த வட்டாரங்கள் தெரிவித்தன.

அனைத்து தரப்பினரதும் அபிலாஷைகளை பூர்த்தி செய்யும் வகையில் நிரந்தர தீர்வு காண்பதற்கு கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கையை இலங்கை அரசாங்கம் தீவிரமாக கருத்திற்கொள்ளும் என தான் நம்புவதாகவும் அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணா கூறியுள்ளார்.

*நீங்க நம்புங்க சார்! நாங்க நம்பல்ல...*

# கிரிபத் பரிமாறி தைத்திருநாளைக் கொண்டாடினாராம் டக்ளஸ்



கிரிபத் (பாற்சோறு) பொங்கி தைத்திருநாளை வரவேற்றார் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா. தமிழர் பண்பாடுகளை மறந்து சிங்களப் பண்பாடுகளையும் சிங்கள ஆதிக்கத்தினையும் வலுக்கட்டாயமாக திணிக்க முற்படுகின்றார்.

யாழ். மாவட்ட ஈ.பி.டி.பி தலைமை அலுவலகத்தில் தைத்திருநாள் விழா கொண்டாடப்பட்டுள்ளது. ஈ.பி.டி.பி உறுப்பினர்கள், ஆதரவாளர்கள், உறவினர்கள் போன்றவர்களைக் கூட்டியே டக்ளஸ் 2012ம் ஆண்டின் தைத்திருநாளை கொண்டாடியுள்ளார்.

அமைச்சர் பொங்கல் பானையில் அரிசியினை இட்டு, பாற்சோற்றினைப் பொங்கி அனைவருக்கும் சிங்கள பாரம்பரியத்துடன் பரிமாறியுள்ளார்.

*அண்ணை டக்ளஸ்... உன்ரை பெயரை பண்டா தேவானந்தா என்று மாற்று. ஆனால் தமிழனை தமிழனாக வாழ விடு!*

# இந்தியாவிடம் விட்டுக் கொடுத்தால் இழப்புகளை ஏற்படுத்துமாம்

## 'டெய்லி மிரர்' ஆசிரியர் தலையங்கம்

சிறிலங்கா மீதான சீனாவின் செல்வாக்கு அதிகரித்து வருவதால், அயல்நாடென்ற வகையில் சிறிலங்கா விடயத்தில் எவ்வாறான அதிகாரத்தைக் கொண்டிருக்க வேண்டுமோ அவற்றை தற்போது இந்தியா இழந்துள்ளது.

இவ்வாறு கொழும்பில் இருந்து வெளியா கும் 'டெய்லி மிரர்' ஆங்கில நாளேட்டின் ஆசிரியர் தலையங்கத்தில் கூறப்பட்டுள்ளது. இதன் மொழியாக்கம்:

சிறிலங்காவுடன் பரஸ்பர விவகாரங்கள் தொடர்பாக இந்தியாவின் பங்களிப்பானது கறுப்பு அல்லது வெள்ளை நிறங்கள் போன்று தெளிவாக அல்லாது சாம்பல் நிறம் போன்று மங்கலாக உள்ளது.

**மொழியாக்கம்: நித்தியபாரதி**



இறைமையுள்ள நாடுகளின் வரைபடத்தி லிருந்து சிறிலங்காத் தீவை அகற்றும் முயற்சி யில் அனைத்துலக அழுத்தங்கள் மேற்கொள் ளப்பட்ட போது இந்தியா எம்மை மீட்பதற்காக முன்வந்தது.

மறுபுறத்தில், இந்தியா புலிகளை வளர்த்தி ருந்தது என்பதும் அறியப்பட்ட விடயமாகும். இதற்கான விலையாக இந்திய தேசம் தமது பிரதமர் ஒருவரின் உயிரை இழந்திருந்தது.

இதைவிட சிறிலங்காவின் கடல்சார் எல் லைக் கோடுகளை மீறி இந்தியர்கள் செல் வதால் சிறிலங்காவின் இறைமையை இந் தியா அவமதித்துள்ளதென்ற வரலாற்றையும் இது கொண்டுள்ளது.

இவ்வாறான கடந்தகாலப் பதிவுகளுடன், இரு அயல்நாடுகளும் பரஸ்பரம் மற்றைய நாட்டிற்குப் பயணம் செய்கின்றார்கள்.

அதாவது டெல்லியிலிருந்து கொழும்பு வரையும், கொழும்பிலிருந்து டெல்லி வரையும் இரு நாட்டு முக்கிய அதிகாரிகள் உத்தியோக பூர்வ பயணங்களை மேற்கொள்வதானது, பெரிய நாடான இந்தியாவிற்கும் சிறிய நாடான சிறிலங்காவிற்கும் இடையிலான நட்புநிலை யானது பொதுவானதாகவும், உண்மைத் தன்மை மிக்கதாகவும் உள்ளது என்ற எண் ணத்தைத் தருகின்றது.

இருந்தும், ஆழமாகப் பார்க்கில் இவ்விரு நாடுகளும் சில முக்கிய பிரச்சினைகளைக் கொண்டுள்ளதுடன், இவை தொடர்பாக உடன்பாடொன்றை எட்டிக் கொள்ள முடிய இயலாதவர்களாக இருப்பதையும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

இவ்வாறான பின்னணியில், இந்திய வெளியுறவுத்துறை அமைச்சர் கிருஸ்ணா சிறிலங்காவிற்கு வருகை தந்துள்ளார். இது ஒரு நல்லெண்ண சமிக்கையைக் குறிக்கும் வரவாகக் கருதப்படவில்லை.

கற்றுக் கொண்ட பாடங்களுக்கான நல்லி ணக்க அறிக்கையின் பரிந்துரைகளிற்கு அமைவாகவும், தற்போதும் பேசப்படும் யுத்தக் குற்றச்சாட்டுக்களின் எதிரொலிகளிற்கு அமை வாகவும் செயற்படும் படி பல்வேறு அனைத் துலக அமைப்புக்கள் சிறிலங்கா அரசாங்கம் மீது அழுத்தம் கொடுத்து வரும் இவ்வேளை யில், இது தொடர்பில் இந்தியாவுடன் இணைப் பைப் பேண வேண்டிய கட்டாயத்தில் சிறி லங்கா உள்ளது.

அதாவது தென்னாசியாவின் மிகப் பெரிய நாடான இந்தியா, அனைத்துலக அரங்கில் காட்டப்படும் எதிர்ப்பிலிருந்து சிறிலங்காவைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என சிறி லங்கா எதிர்பார்த்தால் இந்தியாவுடன் தொடர் பைப் பேணிக் கொள்ள வேண்டும்.

மறுபுறத்தில், பொதுவான உடன்பாட்டை எட்ட முடியாதுள்ள சிறிலங்கா அரசாங்கத் திற்கும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்கும் இடையிலான பேச்சுக்கள் தொடர்பாகவும் சிறிலங்காவிற்கு வருகை தந்துள்ள இந்திய வெளியுறவு அமைச்சர் எஸ்.எம்.கிருஸ்ணா கலந்துரையாடல்களை மேற்கொள்ளவுள் ளார்.

தம்மைத் தெரிவு செய்த மக்களிற்குப் பதிலளிப்பதை விட இந்திய அதிகாரிகளிற்குப் பதிலளிக்கின்ற நிலையில் உள்ளதைக் காண் பிக்கின்ற விதமாக ஒவ்வொரு சிறிய விடயங் களிற்கும் இந்தியாவை நாடுகின்ற தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் போக்குடன், சிறி லங்கா அரசாங்கம் எந்தவொரு தாமதத்தை யும் காட்டாது, தவறான விளக்கப்பாடுகள் இல்லாது, உரத்த குரலில் மிகத் தெளிவாகத் தனது நிலைப்பாடு தொடர்பாகத் தெளிவுடுத்த வேண்டும் என்பது மிகப் பிரதானமானதாகும்.

யுத்தத்தால் பாதிக்கப்பட்டு வடக்கில் வாழும் மக்கள் மீது சிறிலங்கா அரசாங்கம் அக்கறை கொண்டுள்ளதுடன், அவர்களின் நலன்கள் மற்றும் வாழ்வாதார அபிவிருத்தி என்பவற்றை இது தனது அதி உயர் முன்னு ரிமையாக்க் கொண்டுள்ளது என்ற செய்தி வெளிப்படுத்தப்பட வேண்டும்.

இந்த முயற்சியில், சிறிலங்கா அரசாங்க மானது நெடுஞ்சாலைகள் மற்றும் பாலங் களைக் கட்டுவதன் ஊடாக மட்டும் தமிழ் மக் களின் மனங்களில் இடம்பிடித்துக் கொள்ள முடியாது. ஆகவே சிறிலங்கா அரசாங்கமா னது இந்த விடயத்தில் உறுதியான திட்டம் ஒன்றை வரைந்து கொள்ள வேண்டிய தேவை உள்ளது.

> சிறிலங்கா மீதான சீனாவின் செல்வாக்கு அதிகரித்து வருவதால், அயல்நாடென்ற வகையில் சிறிலங்கா விடயத்தில் எவ்வாறான அதிகாரத்தைக் கொண்டிருக்க வேண்டுமோ அவற்றை தற்போது இந்தியா இழந்துள்ளது.

அனைத்துலக கடல் எல்லைக் கோட்டுப் பிரச்சினை இன்னமும் தீர்க்கப்படவில்லை. சிறிலங்காவானது தனது பாரம்பரிய கடற் பிர தேசங்களில் ஏற்படும் எந்தவொரு தடை களையும் முகங்கொடுக்கக் கூடியவாறான ஒழுங்குகளை மேற்கொள்ள வேண்டும்.

இந்த விடயத்தில் எமக்குச் சொந்தமான வற்றில் விட்டுக் கொடுப்புக்களைச் செய்தால் அது எம்மை ஆபத்தான நிலைக்குத் தள்ளி விடும் என்பதை நினைவிற் கொள்ள வேண் டும்.

சிறிலங்கா மீதான சீனாவின் செல்வாக்கு அதிகரித்து வருவதால், அயல்நாடென்ற வகையில் சிறிலங்கா விடயத்தில் எவ்வாறான அதிகாரத்தைக் கொண்டிருக்க வேண்டுமோ அவற்றை தற்போது இந்தியா இழந்துள்ளது.

எவ்வாறெனினும், சில அனுகூலங்களைக் கருத்திற் கொள்ளும் போது சிறிலங்கா இவ் வாறான விடயங்களை இராஜதந்திர மட்டத் தில் கையாளும் போது அது பயன்படுத்தும் முறையானது இன்றியமையாததாக உள்ளது.

இரு நாடுகளும் தமக்கிடையிலான நட்பு நிலையை நீண்டகாலத்திற்குத் தொடர்வதற்கு பொதுவான செயற்படுதளம் ஒன்றை அடை யாளங் கண்டு கொள்ள வேண்டும் என்பது சந்தேகத்திற்கு இடமற்ற விடயமாகும்.

எவ்வாறெனினும் விட்டுக்கொடுப்புக்கள் மேற்கொள்ளப்படக் கூடாது. விட்டுக்கொடுப் புக்கள் எமக்கு இழப்புக்களை ஏற்படுத்தும்.

## தூணாய் நின்ற...

11 ஆம் பக்கத் தொடர்ச்சி

சிறு மழைத்துளிதான் பெருவெள்ளம் என் பதை என்றுதான் தமிழ் மக்கள் உணர்வார் களோ? கட்சிகளுக்குள் வேறுபட்ட கொள்கை கள் இருக்கலாம். தேசியப் பிரச்சினை என்று வந்துவிட்டால் ஒரே குடையின்கீழ்த்தான் இணைய வேண்டும். ஒரே கட்சிக்குள் பல வேறுபட்ட கொள்கை உடையவர்களே தமிழர் கள் என்றால் மிகையாகாது.

சமீபத்தில் இடம்பெற்ற புத்தக வெளியீட்டு வைபவத்தில் காங்கிரஸ் கட்சியின் உறுப்பி னர்கள் ஒன்றுக்கு பின்னான கருத்துக்களை முன்வைத்தார்கள். முன்னாள் அமைச்சர் திருநாவுக்கரசர் பேசியதாவது, 'காங்கிரஸ் வருத்தப்படக்கூடாது, மத்திய அரசு வருத்தப் படக்கூடாது, ஈழத் தமிழர்கள் வருத்தப்படக் கூடாது என்று கத்தி மேல் நிற்பது போல புத்தகம் ஒன்றை சுதர்சன நாச்சியப்பன் எழுதி இருக்கிறார்.

புத்தகங்களை வேகமாகப் படித்து முடிப் பவன் நான். ஆனால், இந்தப் புத்தகத்தை படிப்பதற்கு மூன்று நாட்கள் ஆகிவிட்டது. படிக்கும் போதே தூக்கம் வந்துவிட்டது' என்று எக்குத்தப்பாகத் தொடங்கியவர் திடீரென திசைமாறி, 'எந்த ஓர் இனமும் நசுக்கப்படும் போது, போராடத்தான் செய்வார்கள். விடு தலைப்புலிகள் மட்டும் இல்லை என்றால் 30 ஆண்டு காலத்தில் இன்னும் ஆயிரக்கணக் கான தமிழர்கள் கொல்லப்பட்டு இருப்பார்கள் என்பது உண்மை. என்ன காரண காரியம் இருந்தாலும் ராஜீவ் காந்தியை அவர்கள் கொன்றது தவறு. அந்தத் தவறு இப்போது வேறு ஒரு தவறில் போய் முடிந்தது. ராஜீவ் காந்தியைக் கொன்றவர்கள் தண்டிக்கப்பட வேண்டும் என்பதற்காக 10 லட்சம் தமிழர் களைச் சுட்டுக் கொல்ல ராஜபக்சேவுக்கு அதி காரம் கொடுக்க முடியாது. சுதர்சன நாச்சியப் பன் அடுத்து எழுதப்போகும், 'ஈழத் தீவிற் கோர் பாலம் அமைப்போம்' என்ற புத்தகத் தில் பிரபாகரன் செய்த நல்லது, கெட்டது களையும் எழுத வேண்டும்' என்று திருநாவுக் கரசு சொன்னபோது சில காங்கிரஸ்காரர்கள் தரப்பில் மெல்ல சலசலப்பு தொடங்கியது.

அவருக்கு பதிலடி கொடுக்கும் வகையில் தமிழக காங்கிரஸ் தலைவர் ஞானதேசிகன் பேச்சு இருந்தது. 'ஈழத் தமிழர்களுக்கு காங் கிரஸ் செய்ததைப் போன்று வேறு யாரும் உதவிகள் செய்தது இல்லை. யாழ்ப்பாணத் தில் முன்பு ஈழத் தமிழர்கள் மீன்பிடிக்க முடி யாத நிலை இருந்தது. இப்போது அவர்களும் மீன் பிடித் தொழிலில் இறங்கி இருக்கிறார் கள். யாழ்ப்பாண பகுதிக்குப் போய் தமிழக மீனவர்கள் மீன் பிடிப்பதால், அது ஈழத் தமிழர்களுக்குப் பாதிப்பை ஏற்படுத்துகிறது. அவர்கள்தான் நமது மீனவர்களைத் தாக்கு கிறார்கள். சிங்கள மீனவர்களால் நமது மீன வர்கள் தாக்கப்படுவது இல்லை. இது, விவாத மேடை அல்ல. ஈழத் தமிழர்களுக்காக மட்டு மல்ல தமிழக நலனுக்காகவும் காங்கிரஸ் யாருக்கும் அஞ்சாமல் குரல் கொடுக்கும்' என்று கூறி தனது பேச்சை நிறைவு செய்தார் ஞானதேசிகன்.

தமிழக காங்கிரஸ் தலைவர்களுக்கு ஈழத்தின் வரலாறு இன்றுவரை தெரியாமல் இருக்கிறது போலும். ஈழத்தமிழர்கள் அன்றும் மீன் பிடித்தார்கள், இன்றும் மீன் பிடித்துக் கொண்டே இருக்கிறார்கள். இன்று சிங்களக் கடற்படையினரின் அச்சுறுத்தலுக்கு மத்தியில் மீன்பிடிக்கிறார்கள், அன்றோ சுதந்திரமாக மீன் பிடித்தார்கள். விடுதலைப்புலிகளின் கட் டுப்பாட்டின் கீழ் பல பகுதிகள் இருந்த காலத் தில் தமிழ் மீனவர்கள் சுதந்திரமாக மீன்பிடித் தார்கள் என்பதனை காங்கிரஸ்காரர்கள் அறி யாமல் இருந்துள்ளார்கள் போலும்.

தமிழக மீனவர்களை சிங்களக் கடற்படை யினர்தான் கொன்றும், காயப்படுத்தியும் வரு கிறார்கள் என்று சம்பந்தப்பட்ட மீனவர்களே கூறும்போது மீனவர்களின் பிரச்சினை என்ன வென்றே தெரியாத ஞானதேசிகன் போன்றவர் கள் கூறுவது அருவருக்கத்தக்க விடயம். கொலைகாரர்களை தப்பிக்கவிட்டு மற்றவர் களைப் பழி போட்டே பழகினவர்கள்தான் ஞானதேசிகன் போன்ற காங்கிரஸ்காரர்கள்.

தமிழரின் நலன்களுக்கு விசுவாசமாக இருக்க வேண்டிய தமிழர்களே அவர்களுக்கு எதிராக இருக்கும் போது தமிழர்கள் நிச்சய மாக துரும்பாகத்தான் போக வேண்டும்.

இவைகள் அனைத்திற்கும் ஒரு முடிவு கட்ட வேண்டுமாயின், தமிழக மக்கள் அனை வரும் தமிழர் நலன் சார்பு விடயம் என்று வந்துவிட்டால் ஒன்றிணைந்து போராடினால் எட்டப்பர்கள் அனைவரும் துண்டைக் காணோம் துணியைக் காணோம் என்று ஓடி விடுவார்கள்.

வந்தேறி குடிகளெல்லாம் நம்மையாள அவர்களுக்கு தூணாக இருந்தால் நாம் நிச்ச யம் துரும்பாகத்தான் வேண்டும்.

# நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கையை நிராகரித்து பதில் அறிக்கையை வெளியிட்டது கூட்டமைப்பு

நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கைக்கு பதிலளிக்கும் வகையில் தமிழ்த் தேசிய கூட்டமைப்பினால் 100 பக்கங்களில் அடங்கிய அறிக்கை ஒன்றை வெளியிட்டுள்ளது.

இந்த அறிக்கையின் முன்னுரையில்,

'இலங்கை சுதந்திரமடைந்த பின்னர் இலங்கை வாழ் தமிழ் பேசும் மக்கள் மீது, குறிப்பாக வடக்கு மற்றும் கிழக்கின் தமிழர்கள் மீது திட்டமிட்ட ரீதியிலே மேற்கொள்ளப்பட்டு வந்த சரீரக, அமைப்பு சார்ந்த மற்றும் உளவியல் வன்முறைகளை மீளவும் ஞாபகத்துக் கொண்டு வந்துள்ளது.

இந்த நாட்டின் அங்கங்களான மக்கள் மீது தண்டனை எதுவுமே வழங்கப்படாமல் தாராளமாயும் குறிப்பானதாயும் மேற்கொள்ளப்பட்டு வரும் வன்முறைகளையும், இத்தகைய வன்முறைகளை நெறிப்படுத்தி, அனுசரணை வழங்கி அல்லது அதை திட்டமிட்டு மேற்கொள்வதில் இலங்கை அரசுக்கு உள்ள பங்கினையும் பற்றி ஆற்றொணாத் துயருற்றுள்ளோம்.

சுய ஆட்சி, மாண்பு மற்றும் முழுமையும் சமத்துவ மகிழ்வும் கொண்ட குடியுரிமை போன்ற தமிழர்களின் மறுக்க இயலாத உரிமைகள் பற்றிய கோரிக்கையானது இப்படியாக தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வந்த தீர்வுகளற்ற வன்முறைகளால் வலிவூட்டம் பெற்றுள்ளது.

பல தசாப்த காலமாகத் தமிழர்களின் அரசியல் அபிலாசைகளை தீர்வற்று நெரித்து வந்த வன்முறைகளால்? கதிகலங்கிப் போன தமிழ் வாலிபர்கள் அரசுக்கு எதிராக மேற்கொண்ட வன்முறை எழுச்சிகள் இறுதியிலே பல்வேறு காரணங்களுக்காகக் குடியியல் யுத்தமாக முடிவுற்றமையை மனதிலே வரிந்து கொண்டுள்ளது.

இந்த நாட்டைப் பீடித்துள்ள இனப்பிரச்சினைக்கு நிரந்தரமானதும், நிலைநிற்கத்தக்கதும் நியாயமுமான தீர்வானது தமிழ் பேசும் மக்களின், குறிப்பாக வடக்கு மற்றும் கிழக்கை சேர்ந்த தமிழ் பேசும் மக்களின் மீள் செப்பனிடப்பட்ட திட நம்பிக்கை மீது கட்டப்பெற்றதாய், இலங்கை அரசுடனான அந்த மக்களின் உறவினை மீள் சீர்பொருந்துவதாக அமைய வேண்டும்.

இந்த நாட்டின் கூறுகளாக அமையப்பெற்ற அனைத்து மக்களும் சமத்துவ அந்தஸ்தையும், அரசாட்சிக்கான அடைவு வழியையும், சந்தர்ப்பத்தையும், நீதிக்கும் மாண்புக்குமான அடைவு வழியையும் பெற்றடைவதைத் தரிசனமாகக் கொண்ட ஒரு எதிர்காலத்தை நோக்கியவர்களாய் உள்ளோம்.

2009 இன் இறுதி யுத்தக் கட்டங்களிலே இடம்பெற்ற அரச இராணுவத்தினர், விடுதலைப் புலிகள் மற்றும் குறிப்பாக தமிழ் குடிமக்கள் ஆகியோரின் வாழ்வுகளில் ஏற்பட்ட பெரும் இழப்பையிட்டுப் பெரும் துயருற்றவர்களாய் உள்ளோம்.

குடியியல் யுத்தக் காலத்திலே பிரசன்னமாகியிருந்த பல்வேறு தமிழ் ஆயுதக் குழுக்களின் நடவடிக்கைகளால், இந்த நாட்டிற்குள்ளும் அதற்கு வெளியேயும் இருந்த இலங்கையின் குடிமக்களுக்கும் அரசியற் தலைவர்களுக்கும் ஏற்பட்ட துன்பங்கள் மற்றும் ஏற்பட்ட உயிரிழப்புக்கள் ஆகியவைகள் பற்றிய கண்டனத்தையும் வெளியிட்டுள்ளோம்.

இலங்கை அரசின் இறுதிக்கட்ட இராணுவ நடவடிக்கைகளின் போது வன்னித் தமிழர்கள் மீது கட்டவிழ்த்து விடப்பட்ட வன்முறைகள் மற்றும் சித்திரவதைகள் தொடர்பாக ஐ.நா. செயலாளர் நாயகம் நியமித்த நிபுணர்கள் குழுவானது இலங்கையின் கணக்கொப்புவிப்பு பற்றி வெளியிட்ட கண்டுபிடிப்புகளை மீள்வலியுறுத்தி நிரந்தரமான அரசியற் தீர்வை முன்வைக்கும் அரசின் மீது தமிழ்மக்களின் நம்பிக்கையினை மீள்சீரமைப்பதற்கு, படுமோசமான அதிகாரத் துஷ்பிரயோகம் தொடர்பான கணக்கொப்புவிப்பானது நேர்மையான நல்லிணக்கத்துக்கான செயன்முறைக்கு அவசியமான ஒரு முன்நிபந்தனையாகும்.

யுத்தத்தினால் பாதிக்கப்பட்டவர்களை மையமாகக் கொண்டு, உண்மையை வலியுறுத்துவதை நோக்காக் கொண்டு நெறிப்படுத்தப்பட்டு, பாதிக்கப்பட்டவர்களுக்கு நீதியை நடப்பித்து, அவர்களுக்குப் போதுமான இழப்பீட்டை வழங்குவது நேர்மையான நல்லிணக்கத்துக்கான நடைமுறையாகும்.

யுத்த குற்றங்களையும் இதர மனித உரிமைகள் மீறல்களையும் கொல்லப்படுமளவுக்கு சர்வதேச மனித உரிமைகள் சட்டத்தை மீறியமை தொடர்பான குற்றச்சாட்டுகள் பற்றிய சகல கணக்கொப்பு விடயங்களையும் பற்றி கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்கத்துக்கான ஆணைக்குழுவானது கவனத்திற்கொள்ளும் என இலங்கை அரசானது உலகுக்கு வழங்கி வந்த உறுதியை மீளவும் ஞாபகத்துக் கொண்டு வந்துள்ளது.

மோசமான சர்வதேச குற்றங்கள் தொடர்பாக அரசுகள் கருத்திற்கொள்ள இயலாதிருக்கும் பட்சத்திலே பிரயோகிக்கப்படக் கூடிய குறைநிரப்புக் கொள்கை மற்றும் சர்வதேச சட்டங்களுக்கு அமைவான தீர்வுகள் ஆகியவைகள் பற்றி அறிந்துள்ளோம்.

யுத்தத்தின் இறுதிக்கட்டங்களின் போது இடம்பெற்ற துஷ்பிரயோகங்களால் பாதிக்கப்பட்ட மக்களின் திட நம்பிக்கையை மீளவும் பெற்றிருக்கக் கூடியதான போதியதும் நம்பகத்தன்மை கொண்டதுமான நல்லிணக்கத்தைக் கண்டடைவையும் அமைப்பியக்கம் ஒன்றை நிறுவுவதற்கு இலங்கை அரசு தவறிவிட்டுள்ளமை பற்றி மனக்கசப்படைந்தவர்களாய் உள்ளோம்.

கணக்கொப்புவிப்பு தொடர்பானதாக எதுவுமே இல்லாவிட்டாலுங் கூட, கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கையில் சில நேரிய பரிந்துரைகள் உள்ளடக்கப்பட்டுள்ளன என்பதை அங்கீகரித்து, அதன் பரிந்துரைகள் அனைத்தையும் திரட்டினாலுங் கூட, இலங்கையின் கணக்கொப்புவிப்பினை முன்னெடுப்பதிலே அவை குறைவுபட்டவை என்பதைக் குறிப்பிட்டு கூறுகின்றோம்.

அதன் பரிந்துரைகளை அமுல்படுத்தும் உளச்சுத்தியான முன்னெடுப்புகள் அனைத்துக்குமே எவ்வித பாரபட்சமுமின்றி ஆதரவு வழங்குவதாகத் தெரிவிக்கின்றோம்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பானது குறிப்பிட்ட காரணங்களின் நிமித்தமாகக் கொண்டுள்ள முடிவு யாதெனில், கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்கத்துக்கான ஆணைக்குழுவின் அறிக்கையானது பொறுப்புக்கூறும் முக்கிய விடயங்களைக் கவனத்திற்கொள்ளவில்லை.

அத்துடன் மோசமான யுத்த குற்றச்சாட்டுகளுக்கு எதிராக அதனுடன் தொடர்புபட்ட ஆயுதப் படையினர் மற்றும் குடியியற் பணியாளர் ஆகியோரை வேலியடைத்து பாதுகாக்கவே குறித்த ஆணைக்குழு உருவாக்கப்பட்டுள்ளது.

பொறுப்புக்கூறும் விடயம் தொடர்பாக கருத்திற் கொள்வதற்கோ அல்லது அதனை அங்கீகரிப்பதற்கோ இலங்கை அரசு விரும்பவில்லை என்பது இதிலிருந்து புலப்படுகிறது. கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவின் அறிக்கையை கவனமாக பகுப்பாய்வு செய்த பின்னர் டிசெம்பர் 16 தமிழ்த் தேசிய கூட்டமைப்பினால் வெளியிட்ட ஆரம்பப் பதிலீட்டை மீள்வலியுறுத்தியே இந்த அறிக்கை வெளியிடப்பட்டுள்ளது' என்று கூறப்பட்டுள்ளது.

## கனடாச் செய்திகள்



# ஜனவரி தமிழர் மரபுரிமை மாதம் ரொறன்ரோ மாநகரசபை பிரகடனம்

நடப்பு ஜனவரி மாதத்தைத் தமிழர் மரபுரிமை மாதமென ரொறன்றோ மாநகரசபை பிரகடனம் செய்தது.

மாநகரசபையின் சார்பாக, இவ்வாண்டு ஜனவரி மாதத்தை தமிழர் மரபுரிமை மாதமாக பிரகடனம் செய்வதாக மாநகர முதல்வர் றொப் ஃபோர்ட் அறிவித்தார்.

தமிழ்ச் சமுகம் அதன் செழிப்பான மரபுரிமையைப் பேணுவதில் உறுதிபூண்டுள்ளதாகவும், ரொறன்ரோ பன்முக சமுகமாக அமைவதற்கு தமிழ்ச் சமுகம் பெருமளவு உதவியுள்ளதாகவும் றொப் ஃபோர்ட் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்ச் சமுகத்தின் செழிப்பான கலாசாரத்தையும், மரபுகளையும் காட்சிப்படுத்துவதற்கு தமிழர் மரபுரிமை மாதம் வாய்ப்பளிப்பதாகவும் ரொறன்ரோ மாநகர முதல்வர் றொப் ஃபோர்ட் அவரது பிரகடனத்தில் மேலும் குறிப்பிட்டுள்ளார்.

# ரஷ்யாவுக்கு இரகசிய தகவல்களை வழங்கிய கனேடிய கடற்படை அதிகாரி கைது ரஷ்யாவுக்கு எதிராக கனடா நடவடிக்கை எடுக்குமா?



இரகசிய தகவல்களை வழங்கியதாக குற்றம் சாட்டப்பட்டுக் கைது செய்யப்பட்ட கனேடிய கடற்படைப் புலனாய்வு அதிகாரி, ரஷ்ய புலனாய்வு அமைப்புக்களுக்குத்தான் தகவல்களை வழங்கினாரென சீரீவீ செய்தி வெளியிட்டுள்ளது.

ஹலிஃபக்ஸ் பகுதியில் வசிக்கும் கனேடிய கடற்படைப் புலனாய்வு அதிகாரி, ஜெஃப்றி டெலைல் (Jeffrey Paul Delisle) என்பவர் நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்டார்.

2007 ஆம் ஆண்டு ஜூலை மாதத்திற்கும், இவ்வாண்டு ஜனவரி 13ஆந் திகதிக்கும் இடையில் அந்தத் தகவல்களை அவர் வழங்கினாரென குற்றம் சாட்டப்பட்டுள்ளது. கடந்த வாரம் தகவல்களை வழங்கியபோது அவர் கைது செய்யப்பட்டாரென சீரீவீ தெரிவிக்கிறது.

கப்பல்களின் நடமாட்டம், உட்பட்ட முக்கியமான விடயங்கள் குறித்து டெலைலுக்குத் தெரியுமெனவும், அந்த விடயங்கள் மிகவும் இரகசியமானவை என்பதால், நீதிமன்ற அமர்வுகள் குறித்த தகவல்களை வெளியிடுவதற்குத் தடை விதிக்கப்படுமெனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

அவர் எத்தகைய தகவல்களை வழங்கினாரென்றோ, யாருக்கு அந்தத் தகவல்களை வழங்கினாரென்றோ உத்தியோகபூர்வமாக அறிவிக்கப்படவில்லை. ஆர்.சீ.எம்.பி.யினர் மேற்கொண்டுள்ள விசாரணைக்கு கனேடியக் கடற்படையினர் உதவி வருவதாக அறிவிக்கப்படுகிறது.

உளவுத் தகவல் வழங்கப்பட்ட விடயத்தில் ரஷ்யாவுக்கு எதிராக கனடா தீவிர நடவடிக்கை எடுக்கமாட்டாதென செய்தி வெளியாகியுள்ளது. எதிர்வரும் இலையுதிர் காலத்தில் கனேடிய பிரதமர் ஏபெக் உச்சி மகாநாட்டிற்காக ரஷ்யா செல்லவுள்ள நிலையில், உறவுகளை சீர்குலைப்பதற்கு கனடா விரும்பவில்லையென கனேடிய அதிகாரிகள் கூறியதாக சீரீவீ செய்தி வெளியிட்டுள்ளது.

இந்த நிலையில், ரஷ்யா தொடர்பாக எடுக்கவுள்ள பதில் நடவடிக்கை வெளியே அதிகம் புலப்படாத வகையில் இருக்குமென தெரிவிக்கப்படுகிறது.

இந்த உளவு விவகாரம் தொடர்பாக கனடாவின் நேச நாடுகளுக்கு அறிவித்துள்ளதாகவும், அந்த நாடுகள் கனடாவில் கொண்டிருந்த நம்பிக்கை குறைவடையவில்லையெனவும் கனேடிய பாதுகாப்பு அமைச்சர் பீட்டர் மக்கே தெரிவித்தார்.

தமது இரகசியங்களைக் கவனமாகப் பேணுவதில் கனேடியப் படையினர் அதிக அக்கறை கொண்டுள்ளதாக கனேடியப் படைகளின் தளபதி ஜெனரல் வோல்ட்டர் நறின்ஷிக் (Walt Natynczyk) தெரிவித்தார்.

# கனடா - பிரிட்டிஷ் கொலம்பியாவில் உலகின் மிகப் பெரும் மரகதக்கல் ஏலம்



கனடா - பிரிட்டிஷ் கொலம்பியாவின் கெலோனா (Kelowna) பகுதியில் உலகின் மிகப் பெரும் மரகதக்கல் இந்த மாதத்தின் பிற்பகுதியில் ஏலம் விடப்படும்.

வோட்டர்மெலன் அளவு பெரியதான அந்த மரகதக் கல், 11.5 கிலோ கிறாம் எடை கொண்டது. பிறேசிலில் அகழப்பட்ட அந்தக் கல், இந்தியாவில் பட்டை தீட்டப்பட்டது.

அந்தக் கல், 1.15 மில்லியன் டொலர் பெறுமதியான தென மதிப்பிடப்பட்டது. ஆனால், ஏலத்தின்போது, அதிலும் அதிகமான பணத்திற்கு அது கொள்வனவு செய்யப்படலாமென எதிர்பார்க்கப்படுகிறது.

# ஐரோப்பிய கடன் நெருக்கடி காரணமாக கனடாவுக்கு பத்து பில்லியன் டொலர் இழப்பு



ஐரோப்பாவில் தீவிரமடைந்துள்ள கடன் நெருக்கடி காரணமாக, இவ்வாண்டில் கனேடிய பொருளாதாரத்திற்கு பத்து பில்லியன் டொலர் அளவு இழப்பு ஏற்படுமென கனேடிய மத்திய வங்கி குறிப்பிட்டது.

அது கனடாவின் மொத்தத் தேசிய உற்பத்தியின் 0.6 % சமமாகும்.

உலக பொருளாதாரம் 700 பில்லியன் டொலர் பாதிப்பை எதிர் கொள்ளுமெனவும், ஐரோப்பாவின் பொருளாதாரத் தேக்கம் இவ்வாண்டின் பெரும்பகுதிவரை தொடருமெனவும் மத்திய வங்கி எதிர்வுகூறியது.

கனடாவின் பொருளாதாரம் கடந்த ஆண்டு 2.4 சதவீதத்தால் வளர்ந்ததெனவும், எதிர்வரும் ஆண்டில் வளர்ச்சி 2 சதவீதமாக இருக்குமெனவும் மத்திய வங்கி குறிப்பிட்டது.

கனேடிய மத்திய வங்கி, அதன் பிரதான வட்டிவீதத்தை இவ்வாண்டு முழுவதும் அதிகரிக்காதென்ற ஊகத்தை இவ் அறிக்கை பொருளாதார நிபுணர்கள் மத்தியில் ஏற்படுத்தியுள்ளது.

# லிபரல் கட்சிக்கு ஆதரவு அதிகரிப்பு



பொப் றேயின் தலைமையின் கீழ் லிபரல் கட்சிக்கு ஆதரவு அதிகரித்துச் செல்வதாக புதிய கருத்துக் கணிப பொன்று காட்டுகிறது.

ஃபோறம் றிசேர்ச் (Forum Research) நிறுவனம் நடத்திய கருத்துக் கணிப்பில் கருத்து வெளியிட்டவர்களில் 25 சதவித மானவர்கள் லிபரல் கட்சிக்குத் தமது ஆதரவை வெளியிட்டார்கள். கடந்த மாதத்தின் நடுப்பகுதியில் வெளியான கருத்துக் கணிப்பை விட நான்கு சதவீதம் அதிகமானவர்கள் லிபரல் கட்சிக்கு ஆதரவு வெளியிட்டுள்ளார்கள்.

கொன்சவேற்றிவ் கட்சிக்கு ஆதரவு 35 சதவீதமாகவும், என்டீபீக்கு ஆதரவு 28 சதவீதமாகவும், புளொக் குபெக்குவாவுக்கு ஆதரவு 6 சதவீதமாகவும், பசுமைக் கட்சிக்கு ஆதரவு 4 சதவீதமாகவும் இருந்தது.

லிபரல் கட்சித் தலைவர் பொப் றேயின் செயற்பாடுகளுக்கு, பிரதமர் ஸ்ரீபன் ஹாப்பரின் செயற்பாடுகளை விட அதிக ஆதரவு நிலவுகின்றமை லிபரல் கட்சிக்கு ஆதரவு அதிகரிப்பதற்கு ஒரு காரணமென Forum Research நிறுவனத் தலைவர் தெரிவித்தார்.

# கனடாவின் பல மாகாணங்களில் குளிரான காலநிலை



அல்பேட்டாவின் 13 பகுதிகளில் சாதனை அளவாக வெப்பநிலை கடந்த புதனன்று குறைவடைந்தது. அங்குள்ள ஏராளமான நகரங்களில் வெப்பநிலை பூச்சியத்தின் கீழே 30 பாகை செல்சியஸ் என்ற அளவை விடக் குறைவடைந்தது.

அல்பேட்டாவின் ஹென்றிக்சன் கிறீக் (Hendrickson Creek) பகுதியில் வெப்பநிலை பூச்சியத்தின் கீழே 41.4 பாகை செல்சியசஸ் என்ற நிலையை அடைந்தது.

பல இடங்களில் காற்றுடன் கூடிய குளிர்நிலை பூச்சியத்தின் கீழே 55 பாகை செல்சியஸ் என்ற அளவை அடைந்தது.

மனிரோபாவின் வட பகுதியிலும் கடும் குளிர் நிலவியது. பிரிட்டிஷ் கொலம்பியாவில் வன்கூவர், விக்ரோறியா உட்பட்ட பகுதிகளில் பனிப்பொழிவு ஏற்பட்டது.

கடும் குளிரான நிலை எதிர்வரும் நாட்களில் மாற்றமடையுமென எதிர்வுகூறப்பட்டுள்ளது.

# ஸ்கோஷியா பிளாசா கட்டடத்தை அந்த வங்கி விற்பனை செய்யவுள்ளது



ரொறன்ரோ நகர மத்தியில் உள்ள ஸ்கோஷியா வங்கியின் தலைமை அலுவலகம் அமைந்துள்ள ஸ்கோஷியா பிளாசா (Scotia Plaza) கட்டடத்தை அந்த வங்கி விற்பனை செய்யவுள்ளதென செய்தி வெளியாகியுள்ளது.

பே, மற்றும் கிங் வீதிகளின் சந்திப்பில் ரொறன்ரோ நகரின் நிதி மையத்தில் 68 மாடிகளைக் கொண்ட அந்தக் கட்டடம் அமைந்துள்ளது.

வணிக கட்டங்களின் பெறுமதி அதிகரித்துள்ள நிலையில், அந்தக் கட்டம் ஒரு பில்லியன் டொலர் வரையான அளவு விலையைப் பெறக்கூடுமென எதிர்பார்க்கப்படுகிறது.

கனடாவின் ஏனைய பிரதான வங்கிகள் அவற்றின் தலைமை அலுவலகங்கள் அமைந்திருந்த கட்டடங்களை ஏற்கனவே விற்பனை செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

நிதியைத் திரட்டும் நோக்குடன் ஸ்கோஷியா வங்கி அதனை விற்பனை செய்யவுள்ளது.

## கனடாச் செய்திகள்

# கருவில் உள்ள குழந்தை ஆணா பெண்ணா 30 வாரங்கள் பெற்றோருக்கு தெரிவிக்கப்படக்கூடாதென கோரிக்கை



கருவில் உள்ள குழந்தை ஆணா பெண்ணா என்ன என்பது குறித்த தகவல், கர்ப்பந்தரித்து 30 வாரங்கள் நிறைவடையும்வரை பெற்றோருக்கு தெரிவிக்கப்படக்கூடாதென கனேடிய மருத்துவர் ஒருவர் கேட்டுள்ளார்.

இந்தியா, சீனா போன்ற நாடுகளைப் போன்று, பெண் சிசுக்களை கருவில் அழிக்கும் செயற்பாடு கனடாவில் பாரிய அளவில் இல்லாவிட்டாலும், சிறிய அளவில் அந்தச் செயற்பாடு உள்ளதென கனேடிய மருத்துவ சங்கத்தின் சஞ்சிகையின் இடைக்கால தலைமை ஆசிரியரான மருத்துவர் ராஜேந்திர கேல் (Kale) தெரிவித்தார்.

கனடாவில் குடியேறியுள்ள இந்தியா, சீனா, பிலிப்பீன்ஸ், கொரியா, வியட்னாம் ஆகிய நாடுகளைச் சேர்ந்தவர்கள் ஆண் குழந்தைகளைப் பெற்றுக் கொள்வதற்கு விரும்புவதாக ஆய்வுகள் காட்டுவதாக அவர் குறிப்பிட்டார்.




# ரொறன்ரோ மாநகரசபையின் வரவு செலவுத் திட்டம் நிறைவேற்றப்பட்டது

ரொறன்ரோ மாநகரசபையின் வரவு செலவுத் திட்டம் செலவினக் குறைப்புத் திட்டங்களுக்கு எதிரான பிரேரணை ஒன்றுடன் நிறைவேற்றப்பட்டது.

வரவு செலவுத் திட்டம் தொடர்பாக இடம்பெற்ற வாக்கெடுப்பில், 39 இற்கு 5 என்ற வாக்குகளின் அடிப்படையில் வரவு செலவுத் திட்டம் நிறைவேற்றப்பட்டது.

ஆனால், அதற்கு முன்பாக, கடந்த ஆண்டு மாநகரசபைக்குக் கிடைத்த 154 மில்லியன் டொலர் மேலதிக வருமானத்தில் 15 மில்லியன் டொலரைப் பயன்படுத்தி, சில சேவைக் குறைப்புக்களைத் தவிர்க்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென மாநகரசபை உறுப்பினர் ஜோஷ் கோல் (Josh Colle) சமர்ப்பித்த பிரேரணை 23 இற்கு 21 என்ற வாக்குகளின் அடிப்படையில் நிறைவேற்றப்பட்டது.

அது, மாநகர முதல்வர் றொப் ஃபோர்ட்டுக்கு ஏற்பட்ட ஒரு பின்னடைவெனக் கருதப்படுகிறது.

கிறிஸ்மஸ் காலத்தில் இருந்து சில மாநகரசபை உறுப்பினர்கள் அந்தத் திட்டத்திற்கு ஆதரவைத் திரட்டியதாகவும், இறுதியில் மாநகர முதல்வருக்கு ஆதரவாக இருந்த இரண்டு மாநகரசபை உறுப்பினர்களின் ஆதரவையும் பெற்றதனால் அது நிறைவேற்றப்பட்டதாகவும் தெரிவிக்கப்படுகிறது.

எதிர்வரும் வாரம் நடைபெறவுள்ள மேலதிக வாக்கெடுப்புக்களில், மாநகர முதல்வரின் மேலும் சில திட்டங்களைத் தோற்கடிப்பதற்கு முயற்சி எடுக்கப்படுமென தெரிவிக்கப்படுகிறது.

# கனேடிய மத்திய வங்கி, வட்டிவீதத்தை ஒரு சதவீதமாக பேணவுள்ளது




கனேடிய மத்திய வங்கி, அதன் முதன்மை வட்டிவீதத்தை தொடர்ந்து ஒரு சதவீதமாக பேணவுள்ளதாக அறிவித்தது.

அத்தகைய நடவடிக்கையைத்தான் மத்திய வங்கி எடுக்குமென பரவலாக பொருளாதார நிபுணர்கள் எதிர்பார்த்தார்கள்.

அத்தகைய நடவடிக்கை காரணமாக, மக்களின் செலவினம் அதிகரிக்குமெனவும், கடன்கள் அதிகரித்துச் செல்லுமெனவும், வீடுகளின் விலைகள் அதிகரிக்குமெனவும் தெரிவிக்கப்படுகிறது.

ஒக்ரோபரின் பின்னர், உலகின் பொருளாதாரம் மேலும் சீர்குலைந்துள்ளதென கனேடிய மத்திய வங்கி குறிப்பிட்டது.





# எண்ணைக் குழாய் திட்டத்திற்கு அமெரிக்கா அனுமதி மறுப்பு

கனடாவின் அல்பேட்டா மாகாணத்தில் இருந்து அமெரிக்காவின் ரெக்சாஸ் மாநிலம் வரை, மசகு எண்ணையைக் கொண்டு செல்வதற்கு அமைக்கத் திட்டமிடப்பட்ட Keystone XL எண்ணைக் குழாயை அமைப்பதற்கு அனுமதி வழங்க முடியாதென அமெரிக்க அரசு அறிவித்தது.

அது குறித்த முடிவு உத்தியோக பூர்வமாக அறிவிக்கப்படுவதற்கு முன்பாக கனேடிய பிரதமர் ஸ்ரீபன் ஹாப்பரைத் தொடர்பு கொண்ட அமெரிக்க ஜனாதிபதி பராக் ஒபாமா தமது முடிவு குறித்து விளக்கினார்.

அமெரிக்க ஜனாதிபதியின் முடிவு ஆழ்ந்த ஏமாற்றம் தருவதாக பிரதமர் ஸ்ரீபன் ஹாப்பர் தெரிவித்தார்.

அந்தக் குழாயை அமைப்பதற்கு அனுமதி மறுக்கப்பட்டிருந்தாலும், புதிய தொரு பாதை குறித்து TransCanada நிறுவனம் மீண்டும் விண்ணப்பிக்கலாமென அமெரிக்க ராஜாங்கத் திணைக்களம் குறிப்பிட்டது.

TransCanada நிறுவனம் சமர்ப்பிக்கும் புதிய விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்படுமென கனேடிய அரசு நம்பிக்கை வெளியிட்டது. ஆனால், கனேடிய எண்ணையை விற்பனை செய்வதற்கு வேறு சந்தைகளை ஆராயவுள்ளதாக இயற்கைவள அமைச்சர் ஜோ ஒலிவர் (Joe Oliver) தெரிவித்தார்.

எதிர்வரும் மாதம் பிரதமர் ஸ்ரீபன் ஹாப்பர் சீனாவுக்குப் பயணம் செய்யும் போது, இரு நாடுகளுக்கும் இடையிலான வணிகத்தை அதிகரிப்பது குறித்து பேச்சு நடத்துவார்.

# ஆர்சீஎம்பியினரின் உலங்குவானூர்தி விபத்தில் அதன் விமானி மரணம்



பிரிட்டிஷ் கொலம்பியாவில் ஆர்சீஎம்பியினரின் உலங்குவானூர்தி ஒன்று விபத்துக்குள்ளானபோது, அதன் விமானி மரணமடைந்தார்.

ஃபிரேசர் வலி (Fraser Valley) பகுதியில் உலங்குவானூர்தி விழுந்தது.

அந்த இடத்திற்கு உடனடியாக உதவிப் பணியாளர்கள் அனுப்பப்பட்டார்கள்.

# 2ஆம் எலிசபெத் மகாராணி பதவியை ஏற்று 60 ஆண்டுகள் நிறைவு - தபால்தலை வெளியீடு




இரண்டாம் எலிசபெத் மகாராணி பதவியை ஏற்று 60 ஆண்டுகள் நிறைவடைவதை முன்னிட்டு, தபால்தலை ஒன்றைக் கனடா போஸ்ட் நிறுவனம் வெளியிட்டது.

இடம்பெற்ற நிகழ்வொன்றில், அந்த தபால் தலையை ஆளுநர் நாயகம் டேவிட் ஜோன்ஸ்ரன் வெளியிட்டு வைத் தார்.

இதேவேளை உள்ளூர் தபால்களை அனுப்புவதற்கு பயன்படுத்தப்படும் தபால் தலைகளின் பெறுமதி, இரண்டு சதம் அதிகரித்து, 61 சதமாகியுள்ள தெனவும் கனடா போஸ்ட் அறிவித்தது.

# கனடியத் தமிழர் நிகழ்வுகள்

## பருத்தித்துறை மக்கள் ஒன்றியம் வழங்கும் வருடாந்த பொதுக்கூட்டமும் கலை இரவும்

மேற்படி ஒன்றியத்தின் வருடாந்தப் பொதுக்கூட்டமும் கலை இரவும் இம்மாதம் 28ஆம் திகதி, சனிக்கிழமை மாலை 6 மணிக்கு பாபா மண்டபத்தில் (Baba Banquet Hall, 3300 McNicoll Avenue, Scarorough) நடைபெறும். தொடர்புகளுக்கு: 905 294 6754 / 416 453 1131.

○○○○○○○○○○○○○○○

## கனடா பூநகரி அபிவிருத்திச் சங்கத்தின் கலந்துரையாடல்

பூநகரி பிரதேசசபைக்குட்பட்ட நூல்நிலையங்களுக்கான புத்தகங்கள் வாங்கி விநியோகம் செய்தல் சம்பந்தமாக அங்கத்தவர்களுடனான கலந்துரையாடல் ஜனவரி 22, 2012 மாலை 5:30 மணிக்கு நடைபெறும் இதில் கலந்து உங்கள் ஒத்துழைப்பை வழங்குமாறு கேட்டுகொள் கின்றோம். தொடர்புகளுக்கு: (647) 404 1671 / (647) 808 2242 / www.poonakari.com

○○○○○○○○○○○○○○○

**இங்கு தரப்பட்ட அறிவித்தல் விபரங்களை www.worldtamils.com இணையத்தளத்தில் நிகழ்வுகள் பகுதியில் பார்வையிட முடியும்.**

# கனடிய நாடாளுமன்றத்தில் சர்வகட்சிகளும் கலந்துகொள்ளும் சிறிலங்கா தொடர்பான மாநாடு

ஈழத்தமிழினத்தின் முன்னேற்றத்திற்காக வும் தமிழர்களினால் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு தீர்வொன்றை வற்புறுத்துவதற்காகவும் முன்னின்று செயற்பட்டு வரும் கனடிய மனிதவுரிமை மையத்தின் 2012ஆம் ஆண்டிற் கான ஆரம்ப மைல்கல்லாக இந்த நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

உலக நாடுகளின் அரசுகள் யாவும் யுத்தக் குற்ற விசாரணைக்கு வலியுறுத்திக் கொடுத்த அழுத்தத்தைக் குறைக்க தாங்களே ஒரு தீர்வுத் திட்டத்தை சமர்ப்பித்து உலகை ஏமாற்றி தமிழர்களை அடிமை கொள்ள சிறிலங்கா அரசு மீண்டும் தலைப்பட்டுள்ளது.

சர்வதேசத்தின் பங்களிப்புடனான ஒரு சமாதானத் தீர்வே எங்களிற்குத் தேவையென் பதை நாங்கள் இப்பொழுது எடுத்துக் கூற வேண்டிய கட்டாயத்திலுள்ளோம்.

நீண்ட காலமாக இடம்பெற்றுவரும் இன அழிப்பை மறைப்பதற்காகவே சிறிலங்கா வெளியிட்ட 'கற்றுக்கொண்ட பாடங்கள் மற் றும் நல்லிணக்க ஆணைக்குழு' அறிக்கை யில் ஏதுமேயில்லையென்பதை கனடாவின் சகல கட்சிகளும் புரிந்துகொள்வதற்காகவே இந்த மாநாடு நடைபெறுகிறது.

அமைச்சர்கள், நாடாளுமன்ற உறுப்பினர் கள் என கட்சிபேதமின்றி பலர் கலந்துகொள் ளும் இம்மாநாட்டின் மூலம் ஈழத்தமிழினத் தின் எழுச்சிக்கு வித்திடுவோம். எமது இனத் திற்கு இழைக்கப்பட்ட அநீதியை உலகின் கண்முன் கொண்டு வருவோம்.

கனடிய மனிதவுரிமை மையத்துடன் இணைந்து நீங்களும் எமது மக்களின் வாழ்வியல் மற்றும் அரசியல் தீர்வுக்காய் செய லாற்ற விரும்பின் தயவு செய்து அழையுங் கள். 416 644 7287 அல்லது மின்னஞ்சல் மூல மாக தொடர்பு கொள்ளுங்கள். info@chrv.ca

**உலக மனிதகுல சரித்திரத்தின் எழுச்சிப் புள்ளி நாங்கள் என்பதை நிரூபிப்போம்!!!**

அரசியல் கட்டுரை

# தமிழ்த் தேசமும் சர்வதேசமும் சந்திக்க வேண்டிய பொதுப் புள்ளி!

கஜேந்திரகுமார் பொன்னம்பலம்

தமிழ் தேசத்தை சிங்கள பௌத்த தேசமாக்கும் செயற்பாட்டுக்கு முற்றுப் புள்ளியிடாத வரையில், தமிழ்த் தேசத்தின் இருப்பிற்கு எதிராகவும் சர்வதேசம் எதிர்பார்க்கும் பண்புகளுக்கு எதிராகவும் சிறிலங்கா அரசு செயற்படுவதை யாராலும் கட்டுப்படுத்த முடியாது.

இனப்படுகொலையை தடுப்பதற்கும் தண்டிப்பதற்குமான ஐ.நா சபையின் 1948 ஆம் ஆண்டு பிரகடனத்தின் இரண்டாவது சரத்து பின்வருமாறு கூறுகின்றது.

ஒரு தேசம், ஒரு இனம், சாதி, மதக்குழு என்பவற்றை முழுமையாகவோ அல்லது ஒரு பகுதியாகவோ அழிக்கும் நோக்கில் செயற்படுதல் இனப்படுகொலையாகும் எனக் கூறுகின்றது.

அதாவது மேற் குறிப்பிட்ட தரப்புக்களை: கொலை செய்தல், உடலுக்கு கடுமையான தீமையை ஏற்படுத்தும் வகையில் அல்லது மனோநிலை ரீதியாக பாதிப்பு ஏற்படுத்தும் வகையில் செயற்படுதல். அந்தத் தரப்புக்கள் உடல் அழிவுகளுக்கு உள்ளாகும் வகையில் அவர்களது வாழ்க்கைச் சூழலை திட்டமிட்டு உருவாக்குவதன் மூலம், அந்த குழுவைச் சார்ந்தவர்கள் உடல் ரீதியாக முழுமையாகவோ பகுதியாகவோ அழிவைச் சந்திக்கும் நிலையை உருவாக்குதல். குறித்த தரப்புக்கள் தமது இனத்தை பெருக்கிக் கொள்வதனை தடை செய்யும் நோக்கில் இனப்பெருக்கத்தினை கட்டுப்படுத்தும் வகையில் செயற்படுதல். குறித்த ஓர் தேசம், இனம், சாதி, மதம் சார்ந்த பிள்ளைகளை அவர்களது விருப்பத்திற்கு மாறாக இன்னுமொரு அடையாள குழுவுக்கு மாற்றுதல் என்பனவும் இனப்படுகொலை என வரையறுக்கப்படுகின்றது.

இனப் படுகொலைக்கான சட்டரீதியான வரைவிலக்கணம் மேற்கண்டவாறு இருக்க, நடைமுறையில் பெரும்பாலான சட்ட வல்லுனர்கள், மனிதர்கள் உடல் மற்றும் உயிரியல் ரீதியான அழிப்புக்களுக்கு உள்ளாக்கப்பட்டால் மட்டுமே அந்தக் குற்றத்தை மேற்குறித்த இனப்படுகொலை என்ற வரையறைக்குள் உள்ளடக்க முடியுமெனக் கூறிவருகின்றனர். ஆனால் அதே சர்வதேச சட்டவல்லுனர்களில் ஒரு பகுதியினர், இக்கருத்தை மறுப்பதுடன் வெறுமனே உடல் அழிவு மற்றும் உயிரிழப்புக்களை ஏற்படுத்தப்பட்டால் மட்டுமன்றி குறித்த ஓர் தேசம், இனம், சாதி, மதக்குழுவின் இருப்பை இல்லாமல் செய்வதற்கு மேற்கொள்ளப்படும் சகலமுயற்சிகளும் இனப்படுகொலையே என வாதிட்டுவருகின்றனர். இவ்வாறு வாதிடுவோரது நியாயங்கள் ஏற்கப்படும் நிலை அதிகரித்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

சர்வதேச சட்டம் மற்றும் பெரும்பாலான சட்ட வல்லுனர்கள் கூறுவது போன்று எடுத்துக் கொண்டாலும் கூட, தமிழர் தாயகத்தில் இடம்பெற்ற இறுதி யுத்தத்தில் சிறிலங்கா அரசு பெருமளவு பொது மக்களுக்கு உடல் மற்றும் உயிரியல் ரீதியான அழிவுகளை ஏற்படுத்தியுள்ளது. அதன் மூலம் சிறிலங்கா அரசு இனப்படுகொலையை புரிந்துள்ளது என்பதனை எனது முன்னைய கட்டுரையில் சுட்டிக்காட்டியிருந்தேன்,

தமிழ் தேசத்தின் இருப்பை இல்லாது அழிப்பதற்காக சிறிலங்கா அரசு கையாண்டு வந்துள்ள வழி முறைகளில் ஒரு அங்கமே சர்வதேச சட்டம் கூறுவது போன்ற உடல் மற்றும் உயிரியல் ரீதியான அழிப்பாகும். உயிர்ப் படுகொலைகள் தவிரவும் தமிழ் தேசத்தின் இருப்பை இல்லாமல் அழிப்பதற்காக சிறிலங்கா அரசாங்கமானது திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்கள், நிலப்பறிப்பு, கடலாதிக்கத்தினை சிங்களவர்களது கைகளுக்கு மாற்றுதல், பண்பாட்டு அழிப்பு, கல்வி அழிப்பு, விவசாய துறை அழிப்பு, வர்த்தக ஆதிக்கத்தை அழித்தல், சுகாதார நிலையை தாழ்ந்த மட்டத்தில் பேணுதல் அல்லது முற்றாக மறுத்தல், நீதித்துறையை சிங்கள பௌத்த பேரினமயமாக்கல் போன்ற பல வழிமுறைகளை கையாண்டு வந்தது.

2009 மே. 18 இற்குப் பின்னர் உயிர் கொலைகள் கொத்துக்கொத்தாக இடம்பெறவில்லை என்றாலும், தமிழ் தேசத்தை இருப்பின்னை அழிப்பதற்கான ஏனைய வழிமுறைகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றதுடன், தீவிரப்படுத்தப்பட்டும் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

பிரித்தானியர் இலங்கைத் தீவில் இருந்து வெளியேறிய பின்னர் இலங்கைத் தீவின் முழுமையான ஆட்சியை கைப்பற்றிய சிங்களவர்கள், தமிழ் தேசத்தின் இருப்பை இல்லாமல் செய்வதற்கான இன அழிப்புக்கான வேலைத்திட்டங்களை ஆரம்பித்தனர். குறிப்பாக சிங்களக் குடியேற்றங்கள், நிலப்பறிப்புக்கள், பௌத்தமயமாக்கல், உள்ளிட்ட மேற் குறிப்பிட்ட பல வழிமுறைகளை கையாண்டனர். இவற்றை தடுப்பதற்கு அரசியல் ரீதியாக தமிழ் அரசியல் தலைமைகளால் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் வெற்றியளிக்கவில்லை.

இந்நிலையில் தான் தமிழ் தேசத்தின் இருப்பு அழிக்கப்படுவதனை தடுப்பதற்காக, தமிழ் இளைஞர்கள் ஆயுதம் ஏந்தினர். அதன் விளைவாக தமிழ் தேசத்தை அழிப்பதற்காக சிறிலங்கா அரசின் செயற்பாடுகள் ஓரளவுக்கு மட்டுப்படுத்தப்பட்டிருந்தன.

ஆனால் அந்த இன அழிப்பிற்கு தடையாக இருந்த ஆயுதப் போராட்டத்தை அழிப்பதற்காக, சிறிலங்கா அரசு மேற்கொண்டுவந்த யுத்தம் காரணமாக இன அழிப்பின் ஒரு அங்கமான உயிர் அழிப்பு உச்சக்கட்டத்தை அடைந்தது. இனப்படுகொலை மூலம் யுத்தம் முடிவுக்கு கொண்டுவரப்பட்ட பின்னர், உயிர் அழிப்பு நிறுத்தப்பட்டதாகக் கூறப்பட்டாலும், ஆயுதம் ஏந்துவதற்கான அடிப்படைக் காரணமாக அமைந்த, தமிழ் தேசத்தின் இருப்பை பூண்டோடு அழிப்பதற்கான வேலைத்திட்டங்கள் முன்னெப்பொழுதும் இல்லாதளவுக்கு தீவிரப்படுத்தப்பட்டுள்ளது என்பதனை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

இதேவேளை, தமிழ்த் தேசம் தனது உறவுகளின் உதவியுடன் தனது வாழ்வை நிலை நிறுத்துவதற்கான முயற்சிகளையும் சிங்கள தேசம் தடுத்து நிறுத்தி வருகிறது. இதன் ஒரு கட்டமாகவே, தாயகத்தில் அல்லலுறும் மக்களுக்கு புலம்பெயர் கட்டமைப்புகள் நிறுவன ரீதியாக உதவிக்கரம் நீட்டுவதை தடுக்கும் வண்ணம் அரச இயந்திரம் செயற்பட்டு வருகிறது. இத்தகைய மனிதாபிமான செயற்பாடுகளை விடுதலைப்புலிகளின் ஆதரவு சக்திகள் என கூறும் ஏற்றுக்கொள்ளமுடியாத வாதங்களையும் முன்வைத்து வருகிறது.

இவ்வாறாக உயிரிழப்புக்கள் தவிர்ந்த ஏனைய இன அழிப்பின் அங்கங்களாக உள்ள விடயங்கள் இலங்கைத் தீவில் சிங்கள தேசத்தால் தீவிரப்படுத்தப்பட்டிருக்கின்றது. இச் செயற்பாடுகள் தனித்தனியே நடைபெறுவதாகவும், போருக்குப் பின்னரான இன்றைய காலகட்டத்திலும், இலங்கைத் தீவில் அது உச்ச அளவிலேயே காணப்படுகின்றது என்பதனையும் சர்வதேச மனித உரிமை அமைப்புக்கள் சுட்டிக்காட்டியுள்ளன. ஆனால், இவ் அமைப்புகள் சிறிலங்கா அரசாங்கத்தின் மேற்படி இன அழிப்புச் செயற்பாடுகளை மனித உரிமை மீறல்கள் எனவும் ஜனநாயக விரோதச் செயல்கள் எனவுமே மட்டுப்படுத்தி வரைவிலக்கணப்படுத்த முற்படுகின்றன.

நடைபெறும் உயிர்க்கொலை அல்லாத ஏனைய இன அழிப்புச் செயற்பாடுகளையும் தொகுத்து, தமிழர்களுக்கு எதிராக இலங்கைத் தீவில் இன அழிப்புத்தான் நடைபெறுகின்றது என ஏற்றுக்கொள்வதற்கு சர்வதேசம் தற்போதைக்குத் தயாராக இல்லை.

சர்வதேசம் இவ்வாறாக தமிழ் இனத்திற்கு எதிராக இன அழிப்பு நடைபெறுகின்றது என்பதை ஏற்றுக்கொள்ளாது தயக்கம் காட்டுவதற்கு காரணங்கள் உள்ளன. இதற்கான காரணங்களை கடந்த பத்தியொன்றில் விளக்கியிருந்தேன். இதனை எமது மக்களின் விளக்கத்திற்காக மீண்டும் சுருக்கமாகத் தருவதாயின், சர்வதேசம் தமிழினத்திற்கு எதிராக நடைபெற்ற விடயத்தினை இனப்படுகொலை என ஏற்றுக்கொண்டால், அதன் உச்ச கட்டமாக தமிழ்த் தேசத்தினை சிங்கள தேசத்திடம் இருந்து காக்கும் முகமாக தனிநாட்டினை உருவாக்குவதாக அமையுக்கூடும்.

இது தற்போதைய சர்வதேச ஒழுங்கினை மாற்றியமைக்கும் என்று சர்வதேச சமூகம் கருதுகிறது. அதனாலேயே, இதன் விளைவுகளைத் தவிர்த்துக்கொள்வதற்காகவே, போர்க் குற்றங்களை வலியுறுத்துகின்ற சர்வதேச தரப்புக்கள், தமிழ்மக்கள் மீது மேற்கொள்ளப்பட்டு வருவது ஒரு இன அழிப்பு என்ற உண்மையைத் தவிர்த்துக் கொள்கின்றன.

உலக ஒழுங்கில் மாற்றங்களை ஏற்படுத்தக் கூடாது என்ற காரணத்திற்காக, தமிழர்கள் இன அழிப்பில் இருந்து தப்புவதற்கு முன்னெடுத்த நியாயமான போராட்டத்தை பயங்கரவாத மூலாம் பூசி அதனை ஏற்றுக்கொள்ள மறுத்த சர்வதேசம், சிறிலங்கா அரசினை பயங்கரவாதத்துக்கு எதிராக போராடும் அரசு எனக்கூறி அதற்கு ஆதரவும் வழங்கியது.

போர்க் காலப்பகுதியில் தமிழ் மக்கள் மீது சிறிலங்கா அரசு இனப்படுகொலையினை மேற்கொண்ட போது அதனைத் தடுத்து நிறுத்துமாறு சர்வதேச சமூகத்திடம் தமிழர் தரப்பு தொடர்ச்சியாகக் கூறி வந்தது. அச் சந்தர்ப்பத்தில் சர்வதேச சமூகம் கூறியது என்னவென்றால், இது இனப்படுகொலை அல்ல எனவும் மாறாக அது ஒரு மனித உரிமை மீறல் என்றும், தாராளவாத வாத ஜனநாயகத்திற்கு ஓரளவுக்கு எதிரானதும் அதன் சில பண்புகளை மீறுகின்ற செயற்பாடுகள் மட்டுமே எனவும் கூறியது. அத்துடன் சிறிலங்கா அரசு 'பயங்கரவாதத்திற்கு' எதிராகப் போராட வேண்டியிருப்பதால் சில சந்தர்ப்பங்களில் எதிர்பார்க்கப்படும் முழுமையான தாராளவாத ஜனநாயக பண்புகளை பேண முடியாது இருப்பதாகவும் வியாக்கியானப் படுத்தி, சர்வதேசம் சிறிலங்கா அரசாங்கத்தின் செயற்பாடுகளை நியாயப்படுத்தியது.

மேலும் பயங்கரவாதத்தினை முடிவுக்குக் கொண்டுவருதன் மூலம் ஜனநாயகம் மற்றும் தாராளவாதத்தினை முழுமையாகப் பாதுகாக்க முடியும் எனவும் கூறி போருக்கான தமது ஆதரவினை சர்வதேசம் நியாயப்படுத்தியது. ஆனால் போர் முடிவுக்கு வந்து இரண்டரை ஆண்டுகள் கடந்த நிலையில், உயிர்க் கொலைகள் என்பதைத் தவிர தமிழ் தேசத்தின் இருப்பினை அழிப்பதற்கான இன அழிப்பின் ஏனைய நடவடிக்கைகள் யாவும் பல வடிவங்களில் மிகத் தீவிரப்படுத்தப்பட்டுள்ளன.

அதேவேளை சிறிலங்கா அரசாங்கமானது, சர்வதேச சமூகம் வலியுறுத்துகின்ற ஜனநாயகம், தாராளவாதம், பன்மைத்துவம் போன்ற தன்மைகளுக்கு எதிரான போக்கையும் தீவிரப்படுத்தியிருக்கிறது. அத்துடன், சிறிலங்கா ஆட்சிபீடத்தில் என்றுமேயில்லாத அளவு தனி இனக்குழும ஆட்சியின் (Ethnocracy) பயங்கரத் தன்மை அதிகரித்துள்ளது.

சிறிலங்கா அரசானது தமிழ்த் தேசத்தின் இருப்புக்கு எதிராக மட்டுமல்ல, சர்வதேசம் விரும்புகின்ற நியமங்களுக்கு எதிராகவுமே செயற்படுகின்றது. ஆகவே தமிழ் தேசத்தின் இருப்புக்கும் சர்வதேச சமூகம் விரும்பும் பண்புகளுக்கும் எதிரான ஒருமித்த நிலைப்பாட்டினையே சிறிலங்கா அரசானது கொண்டுள்ளது. சிறிலங்கா அரசு இவ்வாறு செயற்படுவதற்கு மூலகாரணமாக அமைவது, சிங்கள தேசத்தின் சகல மட்டங்களிலும் புரையோடிப் போயுள்ள சிங்கள பௌத்த பேரினவாத சிந்தனையேயாகும். அதாவது தனி இனக்குழும ஆட்சியை நிலைநாட்டி சிங்கள பௌத்த தேசமாகமாக இலங்கைத் தீவை நிரந்தரமாக்குவதே அதன் இலக்காகும்.

இலங்கைத் தீவை சிங்கள பௌத்த தேசமாக்கும் சிங்கள தேசத்தின் செயற்பாட்டுக்கு முற்றுப் புள்ளியிடாத வரையில், தமிழ்த் தேசத்தின் இருப்பிற்கு எதிராகவும், சர்வதேசம் எதிர்பார்க்கும் பண்புகளுக்கு எதிராகவும் சிறிலங்கா செயற்படுவதை தடுக்க முடியாது.

சிறிலங்காவின் இந்த நிலைப்பாட்டில் மாற்றத்தினை ஏற்படுத்துவதற்கு, தமிழர்கள் தனித்துவமான இறைமை கொண்ட தேசம் என்பதை சர்வதேசம் அங்கீகரிக்க வேண்டும். அத்துடன் தமிழ் மக்கள் மீது புரியப்பட்ட மற்றும் புரியப்பட்டுவரும் இன அழிப்புச் தொடர்பாக பக்கச்சார்பற்ற சர்வதேச விசாரணை நடத்தி நியாயம் வழங்கப்படவேண்டும். இச் செயற்பாடுகள் மூலமே தமிழ்த் தேசத்திற்கு எதிரான இன அழிப்புச் செயற்பாட்டினைத் தொடர முடியாது என்ற நிலையை இலங்கைத் தீவில் ஏற்படுத்தி, தனியொரு இனக்குழும ஆட்சியை நோக்கிய சிங்கள தேசத்தின் செயற்பாட்டுக்கு முற்றுப்புள்ளி வைக்க முடியும்.

இதுவே சர்வதேசம் விரும்பும் பண்புகளான ஜனநாயகம், பன்மைத்துவம், தாராளவாதம், மனித உரிமைகள், சட்டத்தின் ஆட்சி, கருத்துச் சுதந்திரம் போன்ற விடயங்களுக்கும் இலங்கைத் தீவில் இடமளிப்பதாக அமையும்.



இலங்கைத் தீவை சிங்கள பௌத்த தேசமாக்கும் சிங்கள தேசத்தின் செயற்பாட்டுக்கு முற்றுப் புள்ளியிடாத வரையில், தமிழ்த் தேசத்தின் இருப்பிற்கு எதிராகவும், சர்வதேசம் எதிர்பார்க்கும் பண்புகளுக்கு எதிராகவும் சிறிலங்கா செயற்படுவதை தடுக்க முடியாது.



# கனடாத் தமிழ்க் கல்லூரியின் பொங்கல் விழா








செய்ந்நன்றி மறவாமை தமிழரது முதன்மையான பண்பாடாகும். அந்த வகையில் உழவுத் தொழிலுக்கு வெப்பமும் மழையும் கிடைக்க உதவிய கதிரவனுக்கு நன்றி கூறும் பொருட்டாகத் தைப்பொங்கல் விழாவானது தமிழ் மக்களால் மிகவும் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. இது தமிழர் புத்தாண்டாகவும் அமைவது மேலும் சிறப்புடையதாகும். ரொரன்ரோ, மாக்கம், பிக்கறிங் ஆகிய மாநகரசபைகள் தைத் திங்களை தமிழர் மரபுத் திங்களாகச் சாற்றியுள்ள நிலையில் பொங்கல் விழாவைக் கடந்த ஆண்டுகளை விட இவ்வாண்டு மிகவும் சிறப்பாகவும் மகிழ்ச்சியாகவும் கனடாத் தமிழ்க் கல்லூரி கொண்டாடி மகிழ்ந்தது.

கனடாத் தமிழ்க் கல்லூரி ஆசிரியர்களும் மாணவர்களும் தமிழ் பண்பாட்டு ஆடை அணிந்து தமிழ்ப் புத்தாண்டையும் தைப் பொங்கல் விழாவையும் வரவேற்றுக் கொண்டாடி மகிழ்ந்தனர். ஆண்கள் வேட்டியும் பெண்கள் நீளப் பாவாடையும் சட்டையும் அணிந்து வந்தமை எமது தாய் நாட்டின் நினைவுகளை மீட்பதாக இருந்தது.

தை 13, 14, 15, 16 ஆகிய நான்கு நாட்களும் கல்லூரியினால் தமிழர் புத்தாண்டு சிறப்பாக கொண்டாடப்பட்டது. முற்கூறிய நான்கு நாட்களிலும் மாணவர் அனைவருக்கும் தமிழ் புத்தாண்டின் சிறப்பைப் பற்றி ஆசிரியர்கள் பல்வேறு முறைகளில் விளக்கினர்.

கனடாத் தமிழ் கல்லூரி பிள்ளைகள் எதிர்காலத்தை சரியாகவே எடுத்துச் செல்கிறது என்னும் உண்மையை 2012 தைத் திருநாள் தெளிவாக எடுத்துச் சொல்லியது. கனடாத் தமிழ்க் கல்லூரியானது தமிழ் மொழியைக் கற்றுக் கொடுப்பதோடு மட்டும் நின்றுவிடாமல் எமது பண்பாடுகளையும் கற்பித்து பேணிக்காத்து வரும் செயலானது பெருமைக்குரியதும் பாராட்டப்பட வேண்டியதும் ஆகும்.



























# மேஜர் தாரணி

## 21ம் ஆண்டு நினைவாக

சட... சட... என்ற துப்பாக்கி வேட்டொலி களாலும் டும்... டும்...என்ற குண்டுச் சத்தங் களாலும் பொன்னாலைக் கிராமமே அதிர்ந்த வண்ணம் இருந்தது.

பொன்னாலையில் இருந்த கைவிடப்பட்ட இராணுவத் தளத்தை மீண்டும் கைப்பற்றும் நோக்குடன் கடற்படையினரின் படகின் மூலம் பொன்னாலைக் கடற்கரையில் இறக்கப்பட்ட இந்திய பராத் துருப்புக்களுக்கும் எமது அணி யினருக்கும் இடையே உக்கிரமான சண்டை நடைபெற்றுக் கொண்டிருந்தது.

கடற்கரைக்கு அருகே அமைந்திருந்த கோயிலில் நிலைகொண்டிருந்த இராணுவத்தி னரை நோக்கி பாதுகாப்பான இடமொன்றில் நிலை எடுத்திருந்த தாரணியின் துப்பாக்கி மிக வேகமாக இயங்கிக் கொண்டிருந்தது. ஆறு மணி நேரங்களாக நடைபெற்ற அந்த மோத லில் ஆண் போராளிகளில் குட்டி உட்பட மூவர் வீரமரணத்தைத் தழுவிக் கொள்கின்ற னர். பெண் போராளிகளில் விஜி காயமடை கின்றார். அத்தோடு இராணுவமும் பின்வாங் கிச் செல்கிறது.

எம்மவர்கள் எல்லோருடைய முகங்களி லும் மூன்று போராளிகளை, உயிர் நண்பர் களை இழந்த துயர் காணப்பட்டாலும் இந்திய இராணுவத்தை வெற்றி கொண்டுவிட்டோம் என்ற பெருமிதமும் காணப்பட்டது. அந்தப் பெருமிதத்தோடு தாரணி தோழிகளைப் பார்த் துச்சொல்கிறார். 'இதுமட்டுமல்ல வெற்றி. இனி நமக்கு எல்லாமே வெற்றிதான். இதைவிட இனி நாங்கள் அண்ணாக்களின் துணை யில்லாது தனித்து நின்று இராணுவத்தை தாக்கி வெற்றி பெறவேண்டும்' நம்பிக்கையோடு அவரது வார்த்தைகள் வெளிவருகின்றது.

சிறிலங்கா இராணுவ வெறியாட்டங்களும் வன்செயல்களும் இந்த மண்ணில் பாரிய அளவில் மேற்கொள்ளப்பட முன்னர் நெல் விளையும் பூமியான மொட்டைக்கறுப்பன் அரிசிக்குப் பெயர்போன பூநகரியைப் பிறப்பிட மாகக் கொண்டவர் தாரணி.

அந்த மண்ணிலே தனது கல்வியை மேற் கொண்ட இவர் மனதில், வளமான பசுமை யான தனது கிராமம் கொஞ்சங் கொஞ்சமாக பசுமை இழந்து வயல் வெளிகளெல்லாம் வெறிச்சோடிப்போன நிகழ்வுகள் ஒரு தாக் கத்தை ஏற்படுத்தின. கண்முன்னே நடந்த சம்பவங்களும் காது வழியே கேட்ட இராணுவ வெறியாட்டங்களும் இவரை இந்தப் போராட் டத்திலே இணைய வைத்தன.

1985ம் ஆண்டு எமதியக்கத்திலே தன்னை இணைத்துக்கொண்ட இவர் மதிவதனி என்ற தனது இயற்பெயரை தனது பயிற்சியின் போது தாரணி என மாற்றம் செய்து கொண்டார்.

பயிற்சிப்பாசறையில் இவர் மிகவும் துடிப் பானவர். வெடிமருந்து சம்பந்தமான வேலை களில் மிகவும் விருப்பமானவராகவும் கெட்டிக் காரியாகவும் விளங்கினார். பயிற்சிப் பாசறை யில் இருந்து புறப்பட்ட உடனே போர்க்களத் தில் எதிரியைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைக் கிறது.

1986ம் ஆண்டு சிறிலங்கா இராணுவத்துக் கும் எமக்குமிடையே அடம்பனில் நடந்த மோதலில் தாரணி பங்கேற்கிறார். இது இவ ரது முதற்களம். அவளுக்கு மட்டுமல்ல, பெண்கள் அணியினரின் முதற் களமும் அது தான். இதில் தாரணி கையில் காயமடை கிறார். இந்தத் தாக்குதல் வரலாற்று முக்கியத் துவம் வாய்ந்தது. புகழ் பெற்றது. முதல் முத லில் இரு இராணுவத்தினர் உயிருடன் பிடிக் கப்பட்டதும் இத்தாக்குதலில்தான்.

அதன் பின் காயம் ஆறியதும் கோட்டை யில் காவல் பணியில் ஈடுபடுகிறார். அத்தோடு யாழ் தொலைத் தொடர்பு நிலைய இராணுவத் தின் மீதான தாக்குதலிலும் பங்கேற்கிறார்.

1987இல் இந்திய இராணுவம் எமது மண் ணில் காலடி வைக்கிறது. ஒப்பந்தம் நிறை வேற்றப்படாததைத் தொடர்ந்து எமக்கும் இந்தி யப் படைகளுக்குமிடையே மோதல்கள் ஆரம் பமாகின்றன.

இந்திய இராணுவத்துக்கும் எமக்கும் இடையே சகல இடங்களிலும் சண்டை நடை பெற்றுக் கொண்டிருந்த சமயம்...

வட்டுக்கோட்டையைக் கைப்பற்றும் நோக் குடன் அராலித்துறையிலிருந்து கல்லுண்டாய் வெளியூடாக முன்னேற முயன்ற இராணுவத் தைத் தடுத்து நிறுத்துவதற்காக எமதணி புறப்பட்ட வேளையில் திடீரென தாரணி 'எடியேய் நாங்கள் போற இடத்தில வயித்துக் குப் போட என்னவெண்டாலும் இருக்குமே' என்கிறார். எல்லோரும் ஒரு நிமிடம் தன் னிலை மறந்து சிரிக்கின்றார்கள். ஒரு தோழி இவரைப் பார்த்து 'உன்னை ஒரு பத்து நாளா வது சாப்பாடு இல்லாமல் பட்டினி போட வேணுமடி' என்றபடி இராணுவத்தை எதிர் கொள்கின்றனர்.

சண்டை என்று தொடங்கிவிட்டால், அதை மட்டுமே குறியாகக் கொண்டு எதிரியைத் தாக் கும் இயல்பு கொண்ட தாரணி இடையிடையே இப்படி ஏதாவது சொல்லி எல்லோரையும் சிரிக்க வைப்பார். இந்த மோதலிலும், இரண் டாம் நாள் இராணுவம் இழப்புகளுடன் பின் வாங்குகிறது.

இப்படிப்பல இந்திய இராணுவ மோதல் களில் பங்கேற்ற இவள், காட்டில் எமது தலை வரால் தயாரிக்கப்பட்ட 'ஜொனி' மிதிவெடித் தயாரிப்பின்போது அதில் ஈடுபட்ட பெண்கள் குழுவுக்குத் தலைமை தாங்கினார். காட்டிலி ருந்த பெண்களது பயிற்சி தளத்தில் இவர் வெடிமருந்து பற்றிய பயிற்சி வகுப்புகளைத் திறமையாக நடத்தினார். மிதிவெடிகள் புதைப் பதில் மிகவும் கெட்டிக்காரி.

1990இல் இந்திய இராணுவம் இம் மண்ணை விட்டகன்றதும் மீண்டும் எமக்கும் சிறிலங்கா இராணுவத்திற்கும் இடையே சண்டை ஆரம்பமாகியது.



**மேஜர் தாரணி**
**மதிவதனி சுப்பிரமணியம்**
அத்தாய், பூநகரி
பிறப்பு - 20.02.1968
வீரச்சாவு - 23.01.1991
குப்பிளான் கட்டுவனில்
சிறிலங்கா இராணுவத்துடனான நேரடி
மோதலின் பின்னான எறிகணை வீச்சில்

பலாலி இராணுவத்தளத்தைச் சூழ நின்ற எமது பெண்கள் அணிக்குத் தாரணி தலை மையேற்றுச் செயற்படுகின்றார். போராளி களோடு அன்பாகவும் அதே நேரம் கண்டிப் பாகவும் பழகும் தன்மை கொண்டவர். தான் இல்லாது யாரும் காவல் அரண்களுக்கு முன் பக்கம் போகக். கூடாது என்பார். தன் தோழி




களுடன் உரையாடும்போது, 'என்ர கண்ணு க்கு முன்னாலை என்னுடைய எந்தப் பிள் ளையும் இராணுவத் தாக்குதலுக்குப் பலியா கக்கூடாது. எனக்கு ஏதாவது நடந்தாலும், என்ர பிள்ளையள் காப்பாற்றப்பட வேணும்' என்பார். யாராவது போராளிகள் காயமடைந்து விட்டால், அவர்க்ளை வைத்தியசாலைக்கு அனுப்புவதற்கிடையில் தவித்துப் போவார். உடனடியாக வைத்தியசாலைக்கு காயம டைந்தவரை அனுப்பி, அவருடன் சென்றவர் கள் திரும்பி வந்து 'பிள்ளை சுகமாய் இருக் குது' என்ற பிறகு தான் நிம்மதி அடைவார்.

இறுதியாக 1991.01.23 அன்று பலாலி இராணுவத்துடனான மோதலில் வீரச்சாவைத் தழுவிக்கொண்ட தாரணி, அதற்கு சில மணி நேரங்களுக்கு முன்னர் கூட தனது சக போராளிகளுடன் அமர்ந்து, யாரோ அனுப்பிய உணவை எல்லோருக்கும் பரிமாறிக் கொண்டே சொல்கிறார். 'நான் இப்ப எல்லோ ருக்கும் சாப்பாடு போடுறன். தற்செயலாக நான் செத்திட்டா எல்லோரும் சேர்ந்து எனக் குப் படையுங்கோ என்ன' என்று கேட்டுவிட் டுச் சிரிக்கிறார். அவருடன் சேர்ந்து எல்லோ ருமே சிரிக்கின்றனர்.

அவருடன் நின்ற போராளிகள் அந்த நேரம் சொன்னார்கள் 'தாரணியக்கா செத் திட்டா ஆனா அவ நினைச்சது மாதிரி அவ அடிக்கடி சொல்லுறது மாதிரி, நாங்கள் ஒரு நாளைக்கு தனியா ஒரு படைத்தளத்தைத் தாக்குவம் எண்ட நம்பிக்கை எமக்கிருக் கின்றது' என்கிறார்கள்.

தாரணி மறைந்துவிட்டார். அவரின் இலட் சியங்களும் கனவுகளும் இன்னும் மறைய வில்லை....

# கனடியத் தமிழர் தேசிய அவையினரால் முன்னெடுக்கப்பட்ட 'தானம்'





"மண்திணிஞாலத்து
வாழ்வோர்க்கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்
கொடுத்தோரே" மணிமேகலை.

எமது வரலாற்றில் எமது மன்னர்களும் தமிழ் அரசர்களும் தானம் செய்து தமது பொதுப்பணிகளைத் திறம்பட நடத்திச் சென்றார்கள். அவர்கள் வழி நின்று நாமும் எமது பணிகளில் ஒன்றாக 'தானம்' என்ற நிகழ்வை அறிமுகப்படுத்தியுள்ளோம்.

அதன் முதற்கட்ட செயற்பாடாக தமிழர்களின் திருநாளாம் தைத்திருநாளன்று சுமார் 2,000 இறாத்தலுக்கும் அதிகமான உணவுப் பொருட்கள் எங்கள் ரொறோன்ரோ வாழ் கனடியத் தமிழ் உறவுகளிடமிருந்து சேகரிக்கப்பட்டு கனடாவிலே வாழ்ந்து கொண்டிருக்கின்ற வாழ்வாதாரத்தில் பின்தங்கிய மக்களுக்காக சேவையாற்றிக் கொண்டிருக்கின்ற 'டெய்லி பிறட்' உணவு வங்கிக்கு (Daily Bread Food Bank) வழங்கியிருந்தோம்.

இச்செயற்றிட்டமானது எமது தாயகத்தில் அல்லற்பட்டுக்கொண்டிருக்கும் எமது தாயக உறவுகளுக்காக முன்னெடுக்கப்பட்டுக் கொண்டிருக்கும் 'மண் வாசனை' போன்று எம் கனடிய மக்களுக்காக உதவும் முகமாக உருவாக்கம் பெற்றுள்ளது.

தமிழர்களின் பண்புகளின் ஒன்றான கொடுக்கும் பண்பை ஊக்கப்படுத்தவும் அவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் நாட்டில் பிறருக்கு உதவும் முகமான ஒரு தளமாகவும் 'தானம்' இருக்கும்.

இத்திட்டமானது கனடாவில் வாழ்வாதாரத்தில் பின்தங்கியிருக்கும் மக்களுக்காக எம் தமிழர்களின் வீடுகளில் இருந்து ஆரம்பித்து பல பொது நிகழ்வுகளிலும் முன்னெடுத்துச் செல்ல கனடியத் தமிழர் தேசிய அவையினராகிய நாங்கள் முயற்ச்சிக்கின்றோம்.

இத்திட்டத்திற்கான ஆதரவையும் அங்கீகாரத்தையும் எம் கனடியத் தமிழ் உறவுகளிடம் கனடியத் தமிழர் தேசிய அவையினர் வேண்டி நிற்கின்றனர்.

இத்திட்டத்தைப் பற்றியோ அல்லது இத்திட்டத்திற்கான பங்களிப்பு செய்ய விரும்பினால் இத்திட்டத்தின் ஒருங்கிணைப்பாளர் வரதன் சோமசுந்தரம் அவர்களோடு தொடர்பு கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

## கனடியத் தமிழர் நிகழ்வுகள்

# மார்க்கம் நகரசபையில் நடைபெற்ற பொங்கல் விழா





தமிழர் திருநாளான தைப் பொங்கல் திரு நாள் முதன் முதலாக மார்க்கம் நகரசபையில் 14-01-2012 ஞாயிற்றுக்கழமை உத்தியோகபூர்வமாகக் கொண்டாடப்பட்டது.

தமிழர்கள் மாத்திரமன்றி பல்லின மக்கள் ஒன்றிணைந்து வாழும் மார்க்கம் மாநகர சபை மண்டபத்தில் மார்க்கம் நகர சபையின் முதலாவது தமிழ் அங்கத்தவரான திரு. லோகன் கணபதியின் பாரியார் இராஜேஸ்வரி, கனடாவின் முதலாவது தமிழ் பாராளுமன்ற உறுப்பினர். செல்வி. ராதிகா சிற்சபைசன், மார்க்கம் பாடசாலை அறங்காவலர் யுவனிதா நாதன், ஒன்ராறியோ மாகாண கலாச்சார அமைச்சர் திரு. மைக்கல் சான், முன்னாள் மார்க்கம் பாடசாலை அறங்காவலர் நீதன் சான் ஆகியோர் உட்பட பொங்கல் விழாவில் பலர் கலந்து சிறப்பித்தனர்.

# கேணல் கிட்டுவின் 19ஆம் ஆண்டு நினைவாக நடைபெற்ற தமிழ் புத்தாண்டும் பொங்கல் விழாவும்





வங்கக் கடலில் வீரகாவியமான கேணல் கிட்டு உட்பட 10 வீர வேங்கைகளின் 19ஆம் ஆண்டு நினைவாக நடைபெற்ற தமிழ் புத்தாண்டும் பொங்கல் விழாவும் கடந்த சனியன்று (14-01-2012) கனடா சிறி ஐயப்பன் இந்து ஆலய கலாச்சார மண்டபத்தில் இடம் பெற்றது. இவ்விழாவினை தமிழ் இளையோர் அமைப்பும் கனடா தமிழ் கலை பண்பாட்டுக் கழகமும் இணைந்து நடத்தியிருந்தனர்.

அன்றைய தினம் கடுமையான குளிரான காலநிலையாக இருந்தபோதும் உணர்வுபூர்வமாக பெருந்திரலான மக்கள் கலந்துகோண்டனர்.

சுடரேற்றல், தேசியக் கொடிநேற்றம் அகவணக்கம் ஆகியவற்றுடன் நிகழ்ச்சி ஆரம்பமானது. தமிழீழத் தேசியக் கொடியை கனடியத் தமிழர் நினைவெழுச்சி அகவத்தின் தலைவரும், கப்ரன் வானதியின் சகோதரியுமான திருமதி. கலாநிதி குலமோகனும் கனடியத் தேசியக் கொடியை கனடியத் தமிழர் தேசிய அவையின் நிர்வாகசபை உருப்பினரான அருள் பிரபாவும் ஏற்றினர்.

நிகழ்வில் சாந்தநாயகி நாட்டிப்பள்ளி ஆசிரியை பூங்குழலி இழங்குமரன் அவர்களின் மாணவிகள். இந்தோ-கனடா நடனப் பள்ளி ஆசிரியை பத்மினி ஆனந்தின் மாணவிகள். நவம் கலைக்கூட ஆசிரியை செல்வி. அபிராமி அருள்பாலசிங்கம் மற்றும் கம்சா பவள காந்தன் ஆகியோரது விடுதலை நடனங்களும். சிவதாசனின் நெறியாள்கையில் 'தணியாத தாகம்' என்ற தாளலயமும் இடம்பெற்றது.

அரசியல் ஆய்வாளர் நேரு குணரத்தினமும் கனடியத் தமிழர் தேசிய அவையின் சார்பில் திருமதி. நந்தினி விஜயபவன் ஆகியோரும் சிறப்புரை ஆற்றினர்.

இந்நிகழ்வில் கனடா- ரொறன்ரோவில் 2011 மாவீரர் நாளை சிறப்புற நடத்திய கனடியத் தமிழர் தேசிய நினைவெழுச்சி அகவத்தின் தமிழர் தேசிய நினைவெழுச்சி நாள் 2011 அறிக்கை, அதன் தலைவர் கலாநிதி குலமோகன் அவர்களால் வாசிக்கப்பட்டது. தேசியக் கொடிகள் இறக்கப்பட்டு உறுதிமொழியுடன் விழா இனிதே நிறைவுபெற்றது.

# குறுக்கெழுத்துப் போட்டி

## இல. - 168

| 01 | 02 | 03 | 04 | | ■ |
|---|---|---|---|---|---|
| 05 | | | | ■ | 06 |
| 07 | | | | ■ | |
| 08 | ■ | 09 | | | |
| 10 | | 11 | | ■ | ■ |
| ■ | ■ | 12 | | 13 | 14 |
| 15 | 16 | | ■ | 17 | |
| 18 | | | ■ | 19 | |

**'கனடா உலகத்தமிழர்' அபிமானிகளே,**

இங்கே தரப்பட்டுள்ள குறுக்கெழுத்துப் போட்டிக்கான, சரியான விடைகளை எதிர்வரும் புதன்கிழமைக்கு முன்னதாகக் கிடைக்கும்படி அனுப்பிவைக்கவும்.
அனுப்பவேண்டிய முகவரி:

**705 Progress Avenue, Unit 106, Scarborough, Ontario. M1H 2X1**

தொலைநகல் இலக்கம்: 416 438 6999

### இடமிருந்து வலம்

01. "நான் தேடும் ------ பூ இது. ஒரு நாள் பார்த்து அந்தியில் பூத்தது."
05. "------ என்னடா தம்பி என்னடா அவசரமான உலகத்திலே" (முதலிரு எழுத்தும் இடம்மாறியுள்ளது.
07. மகிமை, விமரிசை, பெரியோரின் வரலாறு. (குழம்பியுள்ளது)
08. கருமை, மழை, மேகம், வெள்ளாடு. (முதலாம் எழுத்தில் அரவு தவறியுள்ளது)
09. ஓர் உலோகம்.
10. தயவு, இரக்கம், கருணை. (குழம்பியுள்ளது)
15. பூவில் ------------ கூடும் கண்டு பூவும் கண்கள் மூடும். (திரும்பியுள்ளது)
17. மாம்பிஞ்சு, தழும்பு, உடல் மச்சம்.
18. ஒற்றுமையுள்ள பறவை.
19. காலையும் மாலையும் கடவுளைத் துதி.

### மேலிருந்து கீழ்

01. ஒரு மலர்ச் செடி.
02. ஆத்துசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி ஆகிய நூல்களை ஆக்கிய புலவர் குழம்பியுள்ளார்.
03. காடு, சோலை, நீர், உறைவிடம், துளசி. (இரண்டாம் எழுத்தில் தவறுள்ளது)
04. பணக்காரன் குழம்பியுள்ளான்.
06. --------- எய்த இலக்கு மட்டும் பாயும். பணம் பாதாளம் மட்டும் பாயும்.
11. நவமணிகளில் ஒன்று. (குழம்பியுள்ளது)
12. கீர்த்தனத்தின் முதல் உறுப்பு.
13. வெற்றி, திறமை, வலப்பக்கம். (குழம்பியுள்ளது)
14. தங்குமிடம், தனித்தது, அனுமதி.
15. வீடுவரை உறவு, வீதிவரை மனைவி, ------ வரை பிள்ளை, கடைசிவரை யாரோ? (தலைகீழாகவுள்ளது)
16. ------- இழந்த மனிதர் முன்னே ஓவியம் வைத்தார், காதில்லாத மனிதர் முன்னே பாடல் இசைத்தார். (தலைகீழாகவுள்ளது)

### குறுக்கெழுத்துப் போட்டி - 167 இற்கான விடைகள்

| இடமிருந்து வலம் | மேலிருந்து கீழ் |
|---|---|
| 01. கரிகாலன் | 01. கதிரவன் |
| 05. திலகம் | 02. அலரி |
| 07. அரவம் | 03. காகம் |
| 08. யமன் | 04. வலயம் |
| 10. பாகன் | 06. மன்னன் |
| 13. மது | 09. மதுரம் |
| 14. குரவன் | 11. கன்மம் |
| 16. மதி | 12. பாகு |
| 17. மடம் | 15. வடம் |
| 19. கம்பம் | 16. கதி |
| | 18. மணி |

தயாரித்தவர்:
மார்க்கம் சந்திரன்
416-844-7453

குறுக்கெழுத்துப் போட்டி - 167ற்கு சரியான விடைகளை எழுதி பாராட்டு பெறும் அதிஷ்டசாலி

திருமதி. கமலா ஸ்கந்தகுமார்
திருமதி. பா. கமலர்
செல்லத்துரை செந்திநாதன்

# 'கறுப்பு ஜனவரி'யாக ஜனவரி 25 பிரகடனம்

Against Media Suppression
ஊடக அடக்குமுறைக்கு எதிராக
මාධ්‍ය මර්දනයට එරෙහිව




ஊடக அமைப்புக்கள் இணைந்து எதிர்வரும் 25ம் திகதியை கறுப்பு ஜனவரியாக பிரகடனப்படுத்தியுள்ளன.

ஊடகவியலாளர்கள் அதிகளவில் கொல்லப்பட்டதும், தாக்கப்பட்டதும், ஊடக நிறுவனங்கள் சேதப்படுத்தப்பட்டதும் ஜனவரி மாதத்திலேயே இதனால் எதிர்வரும் 25ம் திகதியை கறுப்பு ஜனவரியாக பிரகடனப்படுத்தியுள்ளதாக சுதந்திர ஊடகவியலாளர் அமைப்பின் ஏற்பாட்டாளர் சுனில் ஜெயசேகர தெரிவித்தார்.

அதேநேரம், லசந்த விக்கிரமசிங்கவின் கொலை, பிரகத் எக்நெலிகொடவின் கடத்தல், சிரச ஊடகம் மீதான தாக்குதல் ஆகியன இந்த மாதத்திலேயே இடம்பெற்றுள்ளதாகவும் அவர் சுட்டிக்காட்டினார்.

# இந்தியாவை நம்பிய...

05 ஆம் பக்கத் தொடர்ச்சி

இராணுவ தர்ப்பார் நடைபெறுகின்ற அந்த மண்ணில் நின்றவாறு, உண்மைக்குப் புறம்பான வகையில் தெரிவித்த இக்கூற்று, சர்வதேசத்தின் பிடியில் இருந்து மகிந்த அரசை பிணை எடுப்பதற்கானது.

யுத்தத்தால் பாதிக்கப்பட்டு நிர்மூலமாக்கப்பட்ட மக்களுக்கு வீடுகளும் வீதிகளும் ரெயில்-விமானப் பாதைகளும் இடைக்கிடை ஈருருளிகளும் வழங்கினால் தமிழ் மக்களின் பிரச்சினை தீர்ந்துவிடும் என்று நினைக்கக் கூடாது. தங்கள் மண்ணில் நடைபெற்ற இந்த நிகழ்ச்சிகளில் அந்த மண்ணின் சொந்தக்காரர்களால் தெரிவுசெய்யப்பட்டு, சர்வதேசத்தால் அங்கீகரிக்கப்பட்ட கூட்டமைப்பினர் ஏன் பங்கு பற்றவில்லை என்பதை இந்தியா கவனத்தில் எடுக்க வேண்டும்.

யுத்தத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு இந்தியா ஐம்பதாயிரம் வீடுகள் கட்டிக்கொடுக்கும் என்று ஆரம்பத்திலிருந்து சொல்லப்பட்டது. ஆனால், அமைச்சர் கிருஷ்ணா அதனை நாற்பத்தொன்பதாயிரம் வீடுகள் என்று இப் போது கூறியுள்ளார். ஆயிரம் வீடுகளுக்கு என்னவாயிற்று என்ற கேள்விக்கு மணலாறு, கொக்குத்தொடுவாய்ப் பிரதேசங்கள் பதில் சொல்லும்.

தமிழ் மக்களை அழித்தொழித்த யுத்தத்துக்கு தாராள உதவி செய்த இந்தியா, இலங்கையின் மனித உரிமை மீறல்களையும் போர்க்குற்ற விசாரணைகளையும் இல்லாதொழிக்க தன்னாலான அத்தனை உதவிகளையும் செய்து வருகின்றது.

கடந்த மாதக் கடைசியில் எடுக்கப்பட்ட முடிவின்படி இந்த மாதம் 17, 18, 19ஆம் திகதிகளில் இரு தரப்புப் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றிருக்க வேண்டும்.

ஆனால், அவை நடைபெறவில்லை. அதற்கான காரணமும் அதிகாரபூர்வமாக இலங்கை அரசால் அறிவிக்கப்படவில்லை. இந்தியத் தரப்புக் கூட இதற்கான காரணங்களை இலங்கையிடம் கேட்கவில்லை.

நாடாளுமன்றத் தெரிவுக்குழுவில் கூட்டமைப்பு இடம்பெறாதவரை பேச்சுவார்த்தை இல்லை என்று சில அமைச்சர்கள் இங்கும் அங்குமாகக் கூறியுள்ளனர். இதற்கு அதிகாரபூர்வ அந்தஸ்துக் கிடையாது.

17ஆம், 18ஆம் திகதிகளில் பேச்சுவார்த்தைக்கு அழைக்கப்படலாம் என்று எதிர்பார்த்திருந்த கூட்டமைப்பு ஏமாற்றப்பட்டுள்ளது. இதனை கூட்டமைப்புக்கான ஏமாற்றம் என்று சொல்வதை விட, தமிழினத்துக்கான அவமானமாகவே பார்க்க வேண்டும். அரசாங்கத் தரப்பிலிருந்து ஒருவர்கூட கூட்டமைப்புடன் தொடர்புகொண்டு பேச்சுவார்த்தை இரத்தான காரணத்தைக் கூற விரும்பவில்லை.

19ஆம் திகதியும் அவ்வாறே போய்விட்டது. பேச்சுவார்த்தை முடக்கப்பட்டதா, முறிந்ததா, அல்லது முடிந்ததா என்பதுகூட எவருக்கும் தெரியாது.

பேச்சுவார்த்தை தொடர்ந்து நடைபெற இந்தியா அழுத்தம் கொடுக்க வேண்டும் என்ற கூட்டமைப்பின் வேண்டுகோளை அமைச்சர் கிருஷ்ணா தட்டிக்கழித்துள்ளார்.

பேச்சுவார்த்தையை இலங்கை அரசு இனித் தொடருமா என்பதுகூட மூடுமந்திரமாகவே உள்ளது.

இலங்கையில் தாம் விஜயத்தை மேற்கொண்டிருந்த வேளையில்கூட பேச்சுவார்த்தை நடைபெறவில்லை என்பதை நேரடியாகக் கண்ட பின்னரும் இந்திய அமைச்சர் இது தொடர்பாக எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

பேச்சுவார்த்தை தடைப்பட்டாலும் தீர்வு வரும் என இந்தியா நம்புவதாகத் தெரிவித்துள்ள கிருஷ்ணா, அதற்கான சகல உதவிகளையும் இந்தியா செய்யும் என்று புதுடில்லி திரும்பும் முன்னர் தெரிவித்துள்ளார்.

'இந்தியா எங்களுக்கு அழுத்தம் கொடுக்க முடியாது' என்று கூட்டமைப்புக்கு முகத்தில் அறைவதைப் போல காட்டுவதற்காகவே இதனை திடீரென இலங்கை நிறுத்தியதாக அர்த்தம் கொள்ளலாமா?

அல்லது, கூட்டமைப்பின் இரண்டு விடயங்களிலும் தமக்குள்ள அதிருப்தியை வெளிக்காட்ட இந்தியாவின் ஆலோசனையைப் பெற்று இலங்கை அரசு பேச்சுகளைத் தொடரவில்லை என்று கொள்ளலாமா?

இலங்கை-இந்திய அரசுகளின் கூட்டுத் துரோகமானது தமிழர்களை நசுக்குவதற்கானது என்பதை தமிழர் இப்போது புரிந்து கொள்ள ஆரம்பித்துள்ளனர்.

இந்திய அமைச்சரின் இலங்கை விஜயம் சிங்கள தேசத்துக்கு இப்போது பலம் சேர்த்துக் கொடுத்துள்ளது.

'இந்தியா ஒருபோதும் இலங்கை அரசுக்கு எதிராக செயற்படாது' என்று இலங்கை வெளிவிவகார அமைச்சர் ஜி.எல்.பீரிஸ் கூறியதில் சில உண்மைகள் உண்டு.

இந்த நிலைமை ஜெனிவா மாநாடு முடிவடையும் வரை தொடர வேண்டும் என இரு தரப்பும் விரும்புகின்றன.

'இந்தியாவுக்காகவே புலிகளுடன் இலங்கை யுத்தம் நடத்தியது' என்ற ராஜபக்ச சகோதர்களின்ரின் வாக்குமூலத்தை மீள நினைத்தால் இந்தியா என்ன செய்கிறது, இனி என்ன செய்யும் என்பவைகளைத் தெரிந்துகொள்ள முடியும்.

தங்களை நம்பியிருந்த கூட்டமைப்பினர், இப்பொழுது வேறொரு நாட்டின் பலத்தில் தங்களை மதியாது செயற்படுவது போல இந்தியா நினைப்பதால் பேச்சுவார்த்தையை தொடர வைப்பதில் அது தீவிர கவனத்தை செலுத்த விரும்பவில்லை என்றும் சிலர் கருதுகின்றனர்.

இந்தியாவை முழுமையாக நம்பியிருந்த தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு இனி என்ன செய்யப்போகின்றது என்பதே உலகளாவிய ரீதியில் தமிழர்கள் முன்னால் உள்ள கேள்வி.

# இராசி பலன்

20-01-2012 - 26-01-2012

தெல்லியூர் சிறி நடராஜ சர்மா



## மேஷம்:

இந்த வாரம் உங்களுக்கு ராகு நன்மை தரும் கிரகமாகும். வெளிநாடுகளுக்குச் சென்றுவருவதற்கான புதிய முயற்சிகளில் நல்ல தகவல்கள் வந்து சேருவதற்கான வாய்ப்புகள் உள்ளன. உறவுளர்தாரத்தில் இருந்துவரும் சிக்கல் நிலை இன்னும் சற்று நீடிக்கும். கணவன் மனைவி உறவுகளில் இருந்துவந்த பிரச்சினைகள் குறைந்து ஓரளவு மன மகிழ்ச்சி அடையலாம். உத்தியோகத்தர்களுக்குப் பதவி உயர்வுடன் கூடிய இடமாற்றம் ஏற்படலாம். இரும்புஇ இயந்திரம், மின்சாரம், இரசாயனம், எண்ணெய் போன்ற வியாபாரம் செய்பவர்களும், பலசரக்கு கடை நடத்துகின்ற வியாபாரிகள், பழைய பேப்பர் சம்பந்தமான வியாபாரிகள் நற்பலன்களை அடைவீர்கள். தாயின் உடல் நிலையில் இருந்துவந்த தொல்லைகள் சற்று குறைந்து காணப்படும். பழைய கடன்களை அடைத்து புதிய கடன்கள் வாங்க முயற்சிப்பீர்கள். எடுத்துக்கொண்ட காரியங்களை மிகுந்த முயற்சியின்பேரில் செய்துமுடிப்பீர்கள். வழக்குகளில் நல்ல முடிவுகளுக்கு இன்னும் கால தாமதம் ஆகலாம். லொட்டரியில் ஏமாற்றம் அடைய வேண்டாம். ஞாயிற்றுக் கிழமையில் அம்மன் ஆலய வழிபாடு செய்துவரவும்.



## ரிஷபம்:

இந்த வாரம் உங்களுக்கு ராகு நன்மை தரும் கிரகமாகும். உயரமான இடங்களில் மிகுந்த கவனத்துடன் வேலை செய்வது நல்லது. குடும்பத்தில் எதிர்பாராத செலவுகள் சற்று குறைந்து மன நிம்மதி ஏற்படும். அரசியல்வாதிகளால் ஆதாயம் இல்லை. நண்பர்கள் மற்றும் உற்றார் உறவினர்களின் திடீர் வரவால் பொருட்செலவுகளும் மன நிம்மதிக் குறைவும் உண்டாகலாம். நாட்பட்ட நோய்க்கு விடை காணும் காலமாகும். பொதுநலக் காரியங்களில் ஈடுபட்டு நற்பெயர் எடுப்பீர்கள். மன நிம்மதி குறைந்து நித்திரைக் குறைவும் காலந் தாழ்ந்த உணவருந்துதலும் ஏற்படும். அண்டை அயலாருடன் எச்சரிக்கையாகப் பேசிப்பழகுதல் நல்லது. புதிய வீடு மற்றும் தொழிற் சாலைகளை இடமாற்றம் செய்ய வாய்ப்பு உள்ளது. மீன், முட்டை வியாபாரிகள், தோல் பொருட்களை ஏற்றுமதி இறக்குமதி செய்வோர், ஆராய்ச்சித் துறைகளைச் சார்ந்தவர்கள், துப்புரவுத் தொழில் செய்வோர் நற்பலன் அடைவீர்கள். செய்தொழிலில் நல்ல லாபம் கிடைத்தபோதிலும் சில பிரச்சினைகள் வந்து மிகுந்த பிரயாசத்தின் பின் சரிசெய்துவிடுவீர்கள். பூர்வீகமான இடங்களுக்குச் சென்று வர வாய்ப்பு உள்ளது. வெளிநாடு சென்றுவருவதற்கான முயற்சிகளில் மற்றவர்களை நம்பிப் பணம் பொருட்களைக் கொடுத்து ஏமாற வேண்டாம். ஞாயிற்றுக்கிழமையில் பிதிர் மற்றும் அம்மன் வழிபாடு செய்துவரவும்.



## மிதுனம்:

இந்த வாரம் உங்களுக்கு புதன் நன்மை தரும் கிரகமாகும். உத்தியோகம் இல்லாதவர்களுக்குப் புதிய உத்தியோகம் கிடைக்க வாய்ப்பு உள்ளது. மருந்துப் பொருட்கள், காய்கறி, மரம், விற்னையாளர்கள், தபால் துறையைச் சார்ந்தவர்கள், வங்கிப்பணி செய்பவர்கள், கவிஞர்கள், எழுத்தாளர்கள், பாடலாசிரியர்கள் நற்பலன்களை அடைவீர்கள். நீண்டதூரப் பயணங்களால் பலன் கிடைப்பது காலதாமதமாகும். புதியஆடைகள் மற்றும் ஆபரணங்கள் வாங்குவதைத் தவிர்க்கவும். கடன் கொடுப்பதைத் தவிர்ப்பது நல்லதாகும். அரசியல்வாதிகளால் சில எதிர்பாராத ஆதாயங்க்ளை அடைவீர்கள். குல தெய்வ வழிபாடு செய்துவர முயற்சித்த எண்ணங்கள் நிறைவேறும். நண்பர்கள் உறவினர்களின் வருகையால் பண உதவியும் மன நிம்மதியும் உண்டாகும். அயலார்களுடன் கவனமாகப் பேசுதல் நல்லதாகும். செய்யாத குற்றங்களுக்காக வீண் பழிச்சொல் வர வாய்ப்பு இருக்கின்றது. பிரிந்துபோன கணவன் மனைவி ஒன்று சேரக்கூடிய காலமாகும். வீடு மற்றும் தொழிற்சாலைகளுக்காக வங்கிகளில் இருந்து எதிர்பார்த்திருந்த பண உதவிகள் கிடைக்கும். விபரீதமான எண்ணங்களை நினைத்து வீண் மனக் குழப்பத்திற்கு ஆளாக வேண்டாம். புதன்கிழமையில் மஹாவிஷ்ணு வழிபாடு செய்துவரவும்.



## கடகம்:

இந்த வாரம் உங்களுக்கு சுக்கிரன் நன்மை தரும் கிரகமாகும். பொதுத்தொண்டுகளில் ஈடுபடுவதன் மூலம் நற்பெயர்களை எடுப்பீர்கள். தூரத்து உறவினர்களின் வருகையால் சில சுபகாரிய நிகழ்ச்சிகளுக்கான முயற்சிகளில் முன்னேற்றம் உண்டாகும். காதல் விடயங்களில் நல்ல செய்திகள் வந்து சேரும். புதிய நபர்களின் தொடர்புகளால் மனநிம்மதி குறைய வாய்ப்பு இருப்பதால் எச்சரிக்கையுடன் இருக்கவும். கண், காது களில் கவனம் தேவை. மனைவியின் உடல் நலக் குறைவு காரணமாக செலவுகள் உண்டாகும். தொலைதூரப் பயணங்களைத் தவிர்த்தல் நல்லதாகும். நீண்டநாட்களாக வராத கடன் பணம் திரும்பக் கிடைக்கும். விசா பிரச்சினைகளில் திருப்தியான தகவல்கள் கிடைக்கும் காலமாகும். உடல் நிலையில் உஷ்ண உபாதைகளும், தொற்றுநோய்களும் வந்து நீங்கும். வாகனங்களில் எச்சரிக்கையுடன் பயணம் செய்தால் விபத்துக்களைத் தவிர்க்கலாம். ஏற்றுமதி, இறக்குமதி செய்யும் வியாபாரிகள், திருமணத் தகவல் மையங்கள் மற்றும் திருமண மண்டபங்களை நடத்துவோர், கட்டிட பொருட்களின் வியாபாரிகள், அலங்காரப் பொருள் வியாபாரிகள், சினிமா மற்றும் நாடகத்துறையினர் சிறப்பான பலன்களை அடைவார்கள். வெள்ளிக்கிழமையில் மஹாலட்சுமி வழிபாடு செய்துவரவும்.



## சிம்மம்:

இந்த வாரம் உங்களுக்கு சந்திரன் நன்மை தரும் கிரகமாகும். புதிய வாகனங்கள் வாங்குவது போன்ற முயற்சிகளில் சற்று காலதாமதம் ஏற்படலாம். கணவன் மனைவி உறவுகளில் இருந்துவந்துள்ள கருத்து வேறுபாடுகள் தீர்ந்து மன நிம்மதி அடைவீர்கள். உடல் நிலையில் வயிறு சம்பந்தமான உபாதைகள் வந்துபோகும். மனத்தைரியத்துடன் எடுத்த காரியங்களை வெற்றியுடன் செய்துமுடிப்பீர்கள். அண்டை அயல் வீட்டுக்காரர்களுடன் வீண் பிரச்சினைகள் வர வாய்ப்பு இருப்பதால் முன் கோபத்தை தவிர்ப்பது நல்லதாகும். நீண்டகாலமாக வேலை இல்லாதவர்களுக்குப் புதிய வேலை வாய்ப்புகள் கிடைக்கும். வெகுகாலமாக குடும்பத்தில் சுபகாரிய நிகழ்ச்சிகளில் ஏற்பட்டு இருந்த தடைகள் நீங்கிச் சுபகாரியங்கள் நடைபெறக்கூடிய காலமாகும். தண்ணீர், திரவ பொருட்களின் வியாபாரிகள், மருத்துவ துறைகளைச் சார்ந்த பணியாளர்கள், மருத்துவமனைகளை நடத்துபவர்கள், மருத்துவக் கல்லூரி மாணவர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள் பாடலாசிரியர்கள், சினிமா, நாடகம், இசைத்துறை சார்ந்தவர்கள், வங்கிப் பணியாளர்கள் சிறப்பான பலன்களை அடைவார்கள். திங்கட்கிழமையில் அம்மன் ஆலய வழிபாடு செய்துவரவும்.



## கன்னி:

இந்த வாரம் உங்களுக்கு சனி நன்மை தரும் கிரகமாகும். புதிய வீடு, வாகனங்கள் வாங்குவது போன்ற புதிய முயற்சிகளில் சில தடைகள் வந்துசேரும். மாணவர்களுக்கு கல்வியில் பரிசு, பாராட்டுகளும் பண உதவியும் கிடைக்கும். உறவுளாதாரத்தில் இருந்துவந்த நெருக்கடிகள் சற்று குறைந்து நண்பர்களால் பொருளுதவிகள் கிடைக்கும். வெளிநாடு செல்லுதல் போன்ற முயற்சிகளில் நல்ல தகவல்களை எதிர்பார்க்கலாம். கேட்ட இடத்தில் பணம் கிடைப்பதில் சற்று காலதாமதம் ஏற்படும். விடுபட்டுப்போன பழைய வழக்குகள் மீண்டும் தலைதூக்கும். உடல் நிலையில் கவனத்துடன் இருக்கவும். பிறருக்காக உதவிசெய்து மனமகிழ்ச்சி அடைவீர்கள். காதல் சம்பந்தமான விடயங்களில் எதிர்பார்த்த நல்ல முடிவுகள் கிடைக்கும். புதிய தொழில் ஆரம்பம் செய்ய வங்கிகளின் மூலம் கேட்டிருந்த பண உதவிகள் கிடைக்க வாய்ப்பு உள்ளது. மற்றவர்களின் விடயங்களில் அநாவசியமாகத் தலையிட்டு மன நிம்மதியை இழக்காதீர்கள். இரும்பு, இயந்திரம், டீசல், பெட்ரோல் வியாபாரிகள், பொறியியல் துறையைச் சார்ந்தவர்கள், தரகுத்தொழில், பலசரக்கு கடை நடத்துவோர் நல்ல லாபம் அடைவார்கள். பொதுவாக இது ஒரு நற்பலன் தரும் வாரமாகும். சனிக்கிழமையில் ஐயப்பன் ஆலய வழிபாடு செய்துவரவும்.



## துலாம்:

இந்த வாரம் உங்களுக்கு புதன் நன்மை தரும் கிரகமாகும். வழக்கு விடயங்களில் புதிய சில நபர்களின் உதவியால் சாதகமான நல்ல தீர்ப்புகள் கிடைக்கும். பேப்பர், பேனா, பென்சில், புத்தகம் போன்ற வற்றை விற்கும் வியாபாரிகள், வழக்கறிஞர்கள், எழுத்தாளர்கள், பாடலாசிரியர்கள், கவிஞர்கள், அச்சுத் தொழில் செய்வோர், பத்திரிகைத் துறையைச் சார்ந்தவர்கள், மரக்கறி வியாபாரிகள் நல்ல பலன்களை அடைவார்கள். நெருப்பு, மின்சாரம் போன்ற வற்றில் கவனத்துடன் இருப்பது நல்லது. வீட்டைத் திருத்திக்கட்டுவதற்காக நீண்ட நாட்களாக எடுத்துக்கொண்ட முயற்சிகள் நிறைவேறும். விட்டுப்போன உறவுகள் மீண்டும் தொடர வாய்ப்பு உள்ளது. வெளியூர் பயணங்கள் மூலம் இது நாள் வரை தீராத நோய்களுக்கு விடைகள் காணுவீர்கள். கணவன் மனைவி உறவுகளில் சில கருத்து வேறுபாடுகள் வந்து நீங்கும். காதல் விடயங்களில் சற்று கவனத்துடன் செயல்படுவது நல்லது. பொதுத்தொண்டுகளில் எச்சரிக்கையுடன் பணியாற்றுவது நல்லது. விவசாயம் செய்பவர்கள் எதிர்பாராத ஆதாயங்கள் அடைவார்கள். புதன்கிழமையில் மஹாவிஷ்ணு வழிபாடு செய்துவரவும்.



## விருட்சிகம்:

இந்த வாரம் உங்களுக்கு கேது நன்மை தரும் கிரகமாகும். பிள்ளைகளால் இருந்துவந்த தொல்லைகள் சற்று குறைந்து காணப்படும். நண்பர்கள் உறவினர்களின் சுபகாரிய நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வதற்காக நீண்டதூரப் பயணங்களை மேற்கொள்வீர்கள். கொடுக்கல் வாங்கலில் சற்று கவனத்துடன் இருப்பது நல்லது. சகோதரர்களால் சம்பந்தமில்லாத பிரச்சினைகளும், மனக் குழப்பங்களும் வந்துசேரும். கடன்களை வாங்குவதால் திருப்பிச்செலுத்த இயலாமற் போகக்கூடும் என்பதால் கடன் வாங்குவதைத் தவிர்த்தல் நல்லது. வீடு மற்றும் வாகனங்களைப் பழுதுபார்ப்பதற்காகப் புதிய செலவுகள் வந்துசேர வாய்ப்பு உள்ளது. வங்கிகள் மூலமாக எதிர்பார்த்திருந்த பணம் வரும். தரகு தொழில் செய்வோர், மீன், முட்டை உணவு வியாரிகள், பழைய பேப்பர், பழைய இரும்புப்பொருட்களின் வியாபாரிகள்,தோல் பதனிடும் வியாபாரிகள், காலணி போன்ற பொருட்களை ஏற்றுமதி இறக்குமதிகளைச் செய்யும் வியாபாரிகள் நல்ல லாபம் அடைவீர்கள். பொழுதுபோக்கு விடயங்களுக்காக வீண் பணச் செலவுகள் ஏற்படலாம். திடீர் அதிர்ஷ்டங்கள்மூலமாக பணம் கிடைக்கலாம். திங்கட்கிழமையில் விநாயகர் வழிபாடு செய்துவரவும்.



## தனுசு:

இந்த வாரம் உங்களுக்கு சூரியன் நன்மை தரும் கிரகமாகும். வெகுகாலமாகத் திருமணம் ஆகாதவர்களுக்கு திருமண காரியங்கள் நிறைவேறும். பழைய பொருட்களை விற்றுப் புதிய பொருட்களை வாங்க வாய்ப்பு உள்ளது. நெருப்பு, மின்சாரம் போன்றவற்றோடு தொடர்புடைய துறையைச் சார்ந்தவர்கள், கம்யூட்டர் சாதனங்களின் வியாபாரிகள், இணைய தளங்கள் நடத்துபவர்கள், வெல்டிங் தொழிற் சாலைகளில் பணி செய்வோர், வெளிநாட்டுத் தூதரகங்களில் பணி செய்வோர் நற்பலனை அடைய வாய்ப்பு உள்ளது. மனைவியின் உடல்நிலை பாதிப்பால் மருத்துவச் செலவுகள் உண்டாகலாம். பிள்ளைகளால் இருந்துவந்த தொல்லைகள் சற்று குறைந்து மன நிம்மதி அடைவீர்கள். நண்பர்கள் உறவினர்களின் ஆதரவால் சில காரியங்களைச் சாதித்துக் கொள்வீர்கள். திடீர் அதிர்'டங்கள் மூலம் பணம் கிடைக்க வாய்ப்பு உள்ளது. பங்குத் தொழில் செய்வதற்கான முயற்சிகளில் ஈடுபட்டுப் புதிய தொழில்களைத் தொடங்குவீர்கள். உடம்பில் வாயு மற்றும் வாதம் போன்ற உபாதைகள் வந்துபோகலாம். கொடுத்த வாக்கைக் காப்பாற்ற எடுத்துக் கொண்ட முயற்சிகளில் மனத் திருப்தி அடைவீர்கள். ஞயிற்றுக்கிழமையில் சிவாலய வழிபாடு செய்துவரவும்.



## மகரம்:

இந்த வாரம் உங்களுக்கு வியாழன் நன்மை தரும் கிரகமாகும். சொந்த பந்தங்களுடன் குடும்பத்தில் நீண்டகாலமாக இருந்து வந்துள்ள மனக்கசப்புகள் குறைந்து ஒற்றுமை உண்டாகும். மற்றவர்களின் பிரச்சினைகளில் அநாவசியமாகத் தலையிட்டு மனக் குழப்பத்தை ஏற்படுத்தாதீர்கள். குலதெய்வ வழிபாடு செய்துவருதல் நல்லதாகும். வங்கிகள் மற்றும் கொடுக்கல் வாங்கல் சம்பந்தமான அலுவலகங்களில் பணிபுரிவோர்களுக்குப் பதவி உயர்வுடன் கூடிய பணி இடமாற்றங்கள் ஏற்படுவதற்கான வாய்ப்பு உள்ளது. தந்தை மகன் உறவுகளில் நல்ல சூழ்நிலை காணப்படும். புதிய வீடு மாற்றம் செய்யப்போட்டிருந்த திட்டங்கள் நிறைவேறும் காலமாகும். தென் திசையில் இருந்து திடீர் அதிர்ஷ்டம் மூலம் தனம் வந்து சேரும். பங்காளிகளுடன் சேர்ந்து புதிய தொழில் ஆரம்பம் செய்யப் போட்டிருந்த எண்ணங்கள் நிறைவேறும். விசா சம்பந்தமான பிரச்சினைகளுக்கு எதிர்பார்த்த நல்ல முடிவுகள் கிடைக்கும். பயணங்களின்போது சம்பந்தம் இல்லாத நபர்களின் மூலமாக வீண் பிரச்சனைகள் வர வாய்ப்பு இருப்பதால் முன் கோபத்தைத் தவிர்க்கவும். பூசைப் பொருட்கள், கணினிச் சாதன வியாபாரிகள், பேராசிரியர்கள், நகை வியாபாரிகள், அலங்காரப் பொருட்களின் வியாபாரிகள், பழவியாபாரிகள் நற்பலன் அடைவார்கள். வியாழக்கிழமையில் சிவாலய வழிபாடு செய்துவரவும்.



## கும்பம்:

இந்த வாரம் உங்களுக்கு செவ்வாய் நன்மை தரும் கிரகமாகும். புதிய தொழில் முயற்சிகளில் சிறிது தடைகள் வந்து விலகும். கணவன் மனைவி உறவுகளில் சற்று கவனமுடன் நடந்துகொள்வது நல்லதாகும். தந்தை வழிச் சொத்துக்களில் இருந்துவந்த பிரச்சினைகள் தீர்ந்து சொத்துக்கள் கிடைக்கும். தீயணைப்புத் துறையைச் சார்ந்தவர்கள், ஹோட்டல் பணி ஆற்றுபவர்கள், மின்சாதனப் பொருட்களை உற்பத்தி செய்பவர்கள், அரசுத்துறை சார்ந்த மின் அலுவலகங்களில் பணிசெய்வோர், தொழிற்கூடங்களை நடத்துவோர் நல்ல லாபம் அடைவீர்கள். குடும்பத்தில் காரணம் இல்லாத விசயங்களுக்காக வீண் பிரச்சினைகள் வந்துபோகும். புதிய ஆடைகள், அணிகலன்கள் வாங்குவதற்காக புதிய கடன்கள் வாங்குவீர்கள். பொதுப்பணிகளில் ஈடுபடுவோர் மிக கவனத்துடன் இருப்பது நல்லது. தனப்புழக்கம் சுமாராகக் காணப்படும். உடல் நிலையில் உஷ்ண உபாதைகள் வந்துபோகலாம். பூர்வீக இடங்களுக்குச் சென்றுவரப் போட்டிருந்த திட்டங்கள் நிறைவேறக்கூடிய காலமாகும். தந்தையின் உடல் நிலை பாதிப்புகளால் பொருட் செலவுகள் ஏற்படலாம். செவ்வாய்க் கிழமையில் துர்க்கை ஆலய வழிபாடு செய்துவரவும்.



## மீனம்:

இந்த வாரம் உங்களுக்கு கேது நன்மை தரும் கிரகமாகும். மாணவர்கள் கல்வியில் நன்மதிப்பையும் பாராட்டுக்களையும் பெறுவார்கள். அரசியல்வாதிகள் சிலரின் தொடர்புகள் ஏற்பட்டு அவர்களால் சில ஆதாயங்களை அடைவீர்கள். பிள்ளைகளுக்கு வெகுகாலமாக தடைபட்டிருந்த சுபகாரிய நிகழ்ச்சிகள் நடைபெறக்கூடிய காலமாகும். காணாமற்போன பொருட்கள் நண்பர்களின் உதவியால் திரும்ப வீடுவந்து சேரும். உத்தியோகம் பார்ப்பவர்கள் மேலதிகாரிகளுடன் கவனத்துடன் நடந்து கொள்வதால் வீண் பிரச்சினைகள் குறையும். ஒரு சிலருக்கு நினைத்த இடங்களில் பணி இடமாற்றங்கள் ஏற்படலாம். காதல் விடயத்தில் நல்ல செய்திகள் கிடைக்கும். தொழிற்சாலைகளை திருத்தி அமைக்கப் போட்ட திட்டங்களில் வெற்றி அடையலாம். நிலம் மற்றும் நகைகளை அடகு வைத்தல் போன்றவற்றின் மூலமாகப் பணம் வந்து சேரும். வட்டித் தொழில் செய்வோர், வீடு, நிலம் விற்பனையாளர்கள், உணவு விடுதிகளை நடத்துவோர், கலைத்துறையைச் சார்ந்த பொருள்களின் வியாபாரிகள், அலங்காரப் பொருள் வியாபாரிகள், நகை வியாபாரிகள், தரகுத் தொழில் செய்வோர் நல்ல ஆதாயங்களை அடைவார்கள். திங்கட்கிழமையில் கணபதி வழிபாடு செய்துவரவும்.

# கடன் தொல்லையினால் வருந்துகிறீர்களா ?

# GET OUT OF DEBT WITHOUT BANKRUPTCY

## வங்குரோத்துக்கு செல்லாமல் கடன்களிலிருந்து விடுதலை

# GET OUT OF YOUR DEBT SYNDROMME









உங்கள் அனைத்து கடன்களில்லிருந்தும் 80% வரையிலான கழிவை பெறுவதற்கும்

உங்கள் வீடு, வாகனம், மற்றும் சொத்துக்கள் அனைத்தும் சட்டமுறையில் பாதுகாப்பதற்கும்

கடன் கொடுத்தோரின் தொலைபேசி மிரட்டல்களையும், கடன் வட்டிகளை நிறுத்துவதற்கும்

மாதாந்தம் உங்கள் வருமானத்தில் இருந்து ஒரு பகுதியை கடன்காரர்கள் வசூலிப்பதை நிறுத்துவதற்கும்

ஓர் சிறிய மாதாந்தகட்டணத்தினுடாக எல்லா கடன்களையும் தீர்க்கும் வசதி செய்வதற்கும்

சகல கடன் பிரச்சனைகளிலிருந்து தீர்வுகாண சிறந்த நிபுணத்துவ வழிமுறைகளுக்கும்

உங்கள் மாதாந்த வருமானம் அரசாங்க அட்டவனைக்குட்பட்டிருந்தால்
இலவச ஆலோசனைகளையும், இலவச சேவைகளையும் பெறுவீர்கள்................

# ARE YOU CONCERNED

**ABOUT YOUR DEBTS ?**
**ABOUT YOUR HOUSE HOLD DEBTS ?**

உங்கள் இறுதி முடிவை எடுக்கும் முன்னர் ஒரு தடவை எங்களை அழையுங்கள்

## இத்துறையில் பல வருட அனுபவமிக்க ARU KRISH ஐ

## இன்றே அழையுங்கள்

**இலவச ஆலோசனைகளுக்கு**




# (416) 556-9287

**Credit Revolving Center**
**(GTA Square )**
5215 Finch Ave.E, Suite #223, Scarborough, ON M1S0C2

இந்திய அரசியல்

# பிரதமர் பதவிக்கு முன்னிறுத்தப்படும் முதல்வர் ஜெயலலிதா

உத்தரபிரதேச சட்டமன்ற தேர்தல் தமிழக அரசியலிலும் எதிரொலிக்கத் தொடங்கியுள்ளது. இங்குள்ள முக்கிய கட்சிகளான அ.தி.மு.க.வும் (அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்), தி.மு.க.வும் (திராவிட முன்னேற்றக் கழகம்) தங்களது பிரசாரக் கணைகளை கூர் தீட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டார்கள்.

தி.மு.க.வின் சார்பில் வருகின்ற பெப்ரவரி மூன்றாம் திகதி அக்கட்சியின் முக்கிய முடிவுகளை எடுக்கும் பொதுக்குழுக் கூட்டம் நடைபெறவிருக்கிறது. அந்தக் கூட்டத்தில் 2014ஆம் ஆண்டுக்கான நாடாளுமன்றத் தேர்தல் குறித்த ஆலோசனையும் ஓர் அஜெண்டாவாக சேர்க்கப்பட்டுள்ளது. இன்னொரு பக்கம் ஆளுங்கட்சியான அ.தி.மு.க.வோ எம்.ஜி.ஆர் பிறந்த நாளை (ஜனவரி 17) வெகு விமரிசையாக கொண்டாடி, 'இந்தக் கட்சியை யாராலும் ஜெயிக்க முடியாது' என்று அறிவித்து இருக்கிறது. தமிழக முதல்வரும் அக்கட்சியின் பொதுச் செயலாளருமான ஜெயலலிதா கள்ளக்குறிச்சியில் எம்.ஜி.ஆர். சிலையையும் வீடியோ கொன்பரன்ஸிங் மூலம் திறந்து வைத்துள்ளார். அத்துடன் நாடாளுமன்றத் தேர்தலை சந்திக்க தயாராகுங்கள் என்ற ரீதியில் தன் தொண்டர்களுக்கு அழைப்பு விடுத்துள்ளார்.

அதற்கு முன்பு நடைபெற்ற துக்ளக் பத்திரிகையின் 42ஆவது ஆண்டுவிழாவில் பிரபல பத்திரிகையாளரும் துக்ளக் ஆசிரியருமான சோ, 'பாரதிய ஜனதா கட்சி மத்தியில் ஆட்சி அமைக்க முடியாத பட்சத்தில் ஜெயலலிதாவை பிரதமர் பதவிக்கு ஆதரிக்க வேண்டும்' என்று பா.ஜ.க.வின் பிரதமர் வேட்பாளர்களாக பேசப்படும் அத்வானி மற்றும் நரேந்திர மோடியை வைத்துக் கொண்டே முன்மொழிந்திருக்கிறார். இது தமிழக அரசியலில் பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது.

முதல்வர் ஜெயலலிதாவைப் பொறுத்தமட்டில் டெல்லி செங்கோட்டையில் அ.தி.மு.க. ஆட்சி என்பது இன்று நேற்றல்ல! பன்னிரெண்டு வருடத்திற்கு முன்பு நடைபெற்ற அ.தி.மு.க. பொதுக்குழுவிலேயே, 'அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் இங்கே புனித ஜோர்ஜ் கோட்டையை (தமிழ்நாடு) கோலோச்சுவது மட்டுமல்ல மத்தியிலே செங்கோட்டையிலும் கோலோச்சுவதை நீங்கள் பார்க்க வேண்டும். அது நிச்சயம் ஒரு நாள் நடந்தே தீரும்... இது வெறும் வார்த்தைகள் அல்ல. கைதட்டலைப் பெற வேண்டும் என்பதற்காகச் சொல்லும் வார்த்தையும் அல்ல. நான் ஒவ்வொரு வார்த்தையையும் அளந்து பேசுகிறேன்... அனைத்து இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் பெயரளவில் மட்டும் அனைந்திந்திய கட்சியல்ல. அது உண்மையாகவே இந்தியாவை எதிர்காலத்தில் ஆளப்போகின்ற கட்சி என்பதை நிரூபித்துக் காட்டுவோம்' என்று ஆணித்தரமாக பேசினார். ஆகவே அ.தி.மு.க. டெல்லியை ஆள வேண்டும் என்பதும், அங்கே தான் பிரதமராக வேண்டும் என்பதும் ஏறக்குறைய 12 ஆண்டுகாலமாக முதல்வர் ஜெயலலிதாவின் கனவு. அதைத்தான் இப்போது துக்ளக் ஆசிரியர் சோ முன்மொழிந்திருக்கிறார்.

இது எல்லாமே உத்தரபிரதேச தேர்தலுக்குப் பிறகு காங்கிரஸ் கட்சி மத்தியில் மேலும் பலமிழக்கும் என்றும், ஊழல் புகார்களின் ஊர்வலத்திற்கு சொந்தமான அக்கட்சிக்கு வருகின்ற நாடாளுமன்ற தேர்தலில் மீண்டும் ஆட்சியமைக்கும் பலம் கிடைக்காது என்பதையும் அடிப்படையாக வைத்தே பேசப்படுகிறது.

அடுத்த நாடாளுமன்ற தேர்தல் என்று வரும்போது தேசிய அளவில் காங்கிரஸோ அல்லது பா.ஜ.க.வோ தனித்து ஆட்சியமைப்பது இதற்கு முன்பு நடந்து முடிந்த ஏழு நாடாளுமன்ற தேர்தல்களிலும் நடக்கவில்லை. காங்கிரஸ் 'ஐக்கிய முற்போக்கு கூட்டணி' என்றும் பா.ஜ.க., 'தேசிய ஜனநாய கூட்டணி' என்றும் அமைத்து, கூட்டணி கட்சிகளின் தயவுடனேயே மத்தியில் ஆட்சி அமைத்து வந்துள்ளன. வி.பி.சிங், சந்திரசேகர், தேவகவுடா, ஐ.கே.குஜ்ரால் போன்ற காங்கிரஸ், பா.ஜ.க. இல்லாத பிரதமர்கள் மத்தியில் ஆட்சி அமைத்த போதும், அந்த அரசுகள் நீண்ட நாட்கள் நடக்கவில்லை. குறைந்த ஆயுட்காலத்திலேயே ஆட்சியை இழக்க நேர்ந்து விட்டது. ஆகவே இன்று ஊழல் புகார்களின் உச்ச கட்டத்தில் இருக்கிறது காங்கிரஸ் தலைமையிலான ஐக்கிய முற்போக்கு கூட்டணி அரசு. ஊழலின் தாக்கம் என்பது உத்தரபிரதேச தேர்தலில் எப்போதுமே மற்ற மாநிலங்களை விட தீவிரமாக இருக்கும். இதைத்தான் கடந்த கால தேர்தல் முடிவுகள் எடுத்துக்காட்டியுள்ளன. ஆகவே நடைபெறப் போகின்ற உத்தரப்பிரதேச தேர்தல் முடிவுகளுக்குப் பிறகு மத்தியில் நடக்கும் நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரசுக்கோ, பா.ஜ.க.விற்கோ தனித்து ஆட்சி அமைக்கும் நிலை ஏற்படாது என்று நிச்சயமான எதிர்பார்ப்பு உள்ளது.

அதுபோன்ற சூழ்நிலையில் காங்கிரஸ் மற்றும் பா.ஜ.க. அல்லாத ஒரு பிரதமர் வேட்பாளருக்கு அதிர்ஷ்டம் காத்திருக்கிறது. ஏனென்றால் பா.ஜ.க. வர வேண்டாம் என்று நினைக்கும் கம்யூனிஸ்ட் போன்ற கட்சிகள் ஒரு காலத்தில் காங்கிரஸை விரும்பின. அதனால் காங்கிரஸ் பிரதமருக்கு அக்கட்சிகள் 2004 தேர்தலுக்குப் பிறகு ஆதரவு அளித்தன. ஆனால் இன்று மேற்குவங்கம் மற்றும் கேரளாவில் இருந்த மாநில ஆட்சிகளையும் இழந்து நிற்கும் கம்யூனிஸ்டுகள் மீண்டும் ஒருமுறை காங்கிரசுக்கு மத்தியில் ஆட்சி அமைக்க ஆதரவு அளிப்பார்களா என்பது பில்லியன் டொலர் கேள்வி. அதே நேரத்தில் இஸ்லாமியர்களின் வாக்கு வங்கியை குறி வைத்து அரசியல் செய்து கொண்டிருக்கும் கம்யூனிஸ்ட் தோழர்கள் பா.ஜ.க. ஆட்சி அமைக்கவும் ஆதரவு அளிக்க முடியாத சூழ்நிலை உருவாகும். அதுமாதிரி சந்தர்ப்பத்தில்தான் காங்கிரஸ் மற்றும் பா.ஜ.க. இல்லாத வேட்பாளர்களுக்கு வாய்ப்பு உருவாகும். குறிப்பாக காங்கிரஸ் ஆதரிக்காத ஒருவர் பிரதமராகும் வாய்ப்பும் உண்டு. உத்தரபிரதேசத்தில் மாயாவதி அல்லது முலயாம் சிங் யாதவிற்கு இந்த வாய்ப்பு வரும். பீஹாரில் அம்மாநில முதல்வர் நிதிஷ்குமாருக்கு இதே வாய்ப்பு இருக்கிறது. தமிழகத்தில் முதல்வர் ஜெயலலிதாவிற்கு இந்த வாய்ப்பு காத்திருக்கிறது. மாயாவதி அல்லது முலயாம் சிங் யாதவில் இருவரையுமே பா.ஜ.க.வோ அல்லது காங்கிரஸ் கட்சியோ ஆதரிக்க தயங்கலாம். பீஹாரில் முதல்வர் நிதிஷ்குமார் பா.ஜ.க.வின் ஆதரவுடன் ஆட்சி நடத்துகிறார். அதிலிருந்து அவர் வெளியேறிய பிறகுதான் கம்யூனிஸ்ட் கட்சிகள் போன்றவை அவரது வேட்பாளரை ஆதரிக்க முன் வரும். ஆனால் தமிழக முதல்வர் ஜெயலலிதாவிற்கு மட்டுமே பா.ஜ.க. மற்றும் கம்யூனிஸ்ட் கட்சிகள் இரண்டுமே ஆதரிக்கும் வாய்ப்பு பிரகாசமாக இருக்கிறது. ஏனென்றால் முதல்வர் ஜெயலலிதா தலைமையிலான அ.தி.மு.க. இன்று பா.ஜ.க.வின் தயவிலோ அல்லது அக்கட்சியுடனோ கூட்டணியாக இல்லை. காங்கிரஸ் ஆதரவுடன் மத்தியில் ஆட்சி அமைந்து விடக்கூடாது என்பதற்காக பா.ஜ.க.வும் கம்யூனிஸ்ட் கட்சிகளும், ஏன் இதர பிற கட்சிகளுமே அ.தி.மு.க. பொதுச் செயலாளர் ஜெயலலிதாவை பிரதமர் பதவிக்கு ஆதரிக்க முன்வரலாம். அதனால் தானோ என்னவோ 'பா.ஜ.க.வின் இயற்கையான கூட்டாளி அ.தி.மு.க.' என்று அத்வானி சென்னையில் கூறிவிட்டு சென்றுள்ளார்.

மத்தியில் ஆட்சி அமைப்பதைப் பொறுத்தவரை தி.மு.க.இதுவரை அ.தி.மு.க.விற்கு நேர் எதிரான நிலைப்பாட்டையே எடுத்து வந்துள்ளது. 1999இல் பிரதமர் வாஜ்பாய் தலைமையிலான தேசிய ஜனநாயக கூட்டணி அரசுக்கு அளித்து வந்த ஆதரவை அ.தி.மு.க. வாபஸ் பெற்ற போது, தி.மு.க. வாஜ்பாயை ஆதரித்தது. அதன் பிறகு அக்கட்சியுடன் கூட்டணி கண்டு ஒரு நாடாளுமன்ற தேர்தலையும் (1999), ஒரு சட்டமன்ற தேர்தலையும் (2001) சந்தித்தது. அதேபோல் வெளிநாட்டுக்காரர் இந்தியாவின் பிரதமராகக்கூடாது என்ற கோஷத்தை முன்வைத்து காங்கிரஸ் கட்சியை அ.தி.மு.க. எதிர்த்தபோது, காங்கிரசுடன் கூட்டணி வைத்து, 'நேருவின் மருமகளே வருக. நிலையான ஆட்சி தருக' என்ற கோஷமிட்டது தி.மு.க. அதேநேரத்தில் முன்பொரு சமயத்தில் (1996) தமிழகத்திலிருந்து பிரதமராகும் வாய்ப்பு மூப்பனாருக்கு வந்தபோது அதை தடுத்த கட்சி தி.மு.க. என்ற குற்றச்சாட்டும் அக்கட்சி மீது சுமத்தப்பட்டது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் மீண்டும் தமிழகத்திலிருந்து அ.தி.மு.க. பொதுச் செயலாளர் ஜெயலலிதாவிற்கு அப்படியொரு வாய்ப்பு டெல்லியில் வந்தால் தி.மு.க. என்ன செய்யும் என்பதும் கேள்விக்குறி. காணும் பொங்கல் அன்று தி.மு.க. தலைவர் கருணாநிதி வெளியிட்டுள்ள கேள்வி - பதில் பகுதியில், முதல்வர் ஜெயலலிதா பற்றி முன்பொருமுறை எம்.ஜி.ஆர் ஒரு பத்திரிகைக்கு அளித்த பேட்டியை சுட்டிக் காட்டி விட்டு, '...அவரைப் போய் பிரதமராக ஆக்குவதாக சோ சொல்கிறாரே என்று தமிழக மக்கள் வருந்தாமல் இருக்கமாட்டார்கள்' என்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.



ஜெயலலிதா தலைமையிலான அ.தி.மு.க. இன்று பா.ஜ.க.வின் தயவிலோ அல்லது அக்கட்சியுடனோ கூட்டணியாக இல்லை. காங்கிரஸ் ஆதரவுடன் மத்தியில் ஆட்சி அமைந்து விடக்கூடாது என்பதற்காக பா.ஜ.க.வும் கம்யூனிஸ்ட் கட்சிகளும், ஜெயலலிதாவை பிரதமர் பதவிக்கு ஆதரிக்க முன்வரலாம்.

இதையெல்லாம் மனதில் வைத்தே, வருகின்ற பெப்ரவரி 3ஆம் திகதி தி.மு.க.வின் பொதுக் குழுவைக் கூட்டியிருக்கிறார் அக்கட்சியின் தலைவர் கருணாநிதி.

ஆகவே, உத்தர பிரதேச சட்டமன்ற தேர்தலுக்கு பிறகு வரும் சூழ்நிலைகள் டெல்லியில் காங்கிரசுக்கு மேலும் சிக்கலாகும். அதைத் தொடர்ந்து வரும் நாடாளுமன்ற தேர்தல் டெல்லியில் ஆட்சி அமைப்பதில் அ.தி.மு.க.விற்கு முக்கிய பங்கை அளிக்கும் என்பதே இப்போது துக்ளக் ஆசிரியர் சோ உள்ளிட்டோரின் கணிப்பாக இருக்கிறது. இதற்கெல்லாம் ஆதாரமாக தமிழகத்தில் அமையப்போகும் நாடாளுமன்ற தேர்தல் கூட்டணியும் முக்கிய காரணமாக இருக்கப் போகிறது என்பதில் சந்தேகமில்லை. அ.தி.மு.க., தி.மு.க. ஆகிய இரு கட்சிகளும் இப்போதைக்கு 'காங்கிரஸ் எதிர்ப்பில்' கவனமாக இருக்கின்றன. அதே நேரத்தில் காங்கிரஸோ அல்லது விஜயகாந்த் தலைமையிலான தே.மு.தி.க.வோ வெற்றிக்கு உதவும் வாக்குகளை அ.தி.மு.க. மற்றும் தி.மு.க. ஆகிய இரு கட்சிகளுக்கும் கொடுக்க முடியும். ஆனால் அப்படியொரு பங்களிப்பை பா.ஜ.க. தமிழகத்தைப் பொறுத்தமட்டில் செய்ய முடியாது. இன்னும் சொல்லப் போனால் பா.ஜ.க.வுடன் கூட்டணி வைத்திருக்கும் கட்சி என்ற இமேஜ் தி.மு.க.விற்கோ, அ.தி.மு.க.விற்கோ வந்தால் அது வெற்றிக்கு தேவைப்படும் வாக்குகள் வருவதை தடுக்கவே செய்யும். காங்கிரசுடன் கைகோர்ப்பது எந்த அளவிற்கு வெற்றி பெற உதவும் என்பது புலனாகவில்லை. சொல்லப் போனால், 2011 சட்டமன்ற தேர்தலில் அக்கட்சியுடன் கூட்டணி வைத்து தி.மு.க. கையைச் சுட்டுக் கொண்டு விட்டது.

ஆகவே இன்றைய தேதியில் அ.தி.மு.க. மற்றும் தி.மு.க. ஆகிய இரு கட்சிகளுக்கும் 'பிரச்சினையில்லாமல் வெற்றிக்குத் தேவையான வாக்குகளை' அளிக்கும் கட்சி என்ற அந்தஸ்து தே.மு.தி.க.விற்கே இருக்கிறது. அதை விட ம.தி.மு.க., பா.ம.க., விடுதலை சிறுத்தைகள் கட்சி போன்றவற்றையும் சேர்த்து சமாளிக்கும் பலம் தே.மு.தி.க.விற்கு இருக்கிறது. அந்த வகையில் நாடாளுமன்ற தேர்தலையொட்டி தே.மு.தி.க.வை நாடிச் செல்லும் அ.தி.மு.க.வோ, தி.மு.க.வோ விஜயகாந்திற்கு அதிக நாடாளுமன்ற தொகுதிகளை விட்டுக்கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் உருவாகும்.

யார் தே.மு.தி.க.விற்கு அதிக தொகுதிகளைக் கொடுத்து கூட்டணி அமைக்கிறார்களோ அவர்களுக்கு தமிழகத்தில் உள்ள 39 நாடாளுமன்றத் தொகுதிகளில் அதிக எண்ணிக்கையில் வெற்றி பெறுவார்கள் என்பதே இன்றைய நிலைமை. அதை தவிர்த்து விட்டு, உள்ளாட்சி தேர்தலில் அ.தி.மு.க.வும், தி.மு.க.வும் மற்ற கட்சிகளை தனியாக விட்டு விட்டு களமிறங்கியது போன்ற 'அக்னி பரீட்சையில்' நாடாளுமன்ற தேர்தலிலும் ஈடுபட்டால், இரு கட்சிகளுக்குமே 'டெல்லி அதிகாரம்' சிக்கலாகும். ஆகவே, இன்றைய நிலையில் தமிழகத்தில் யார் வெற்றிக் கூட்டணி அமைக்கப் போகிறார்களோ அவர்களுக்கே டெல்லியில் ஆட்சி அமைக்கும் அதிகாரத்தில் முக்கியப் பங்கு கிடைக்கும்!



## உலகச் செய்திகள்

# கொல்லப்பட்ட தலிபான்கள் மீது சிறுநீர் கழித்த அமெரிக்க படையினரில் இருவர் அடையாளம் காணப்பட்டனர்



கொல்லப்பட்ட தலிபான்கள் மீது சிறுநீர் கழித்த அமெரிக்க மரீன் படைப்பிரிவினர் நான்கு பேரில் இரண்டு பேர் அடையாளம் காணப்பட்டுள்ளதாக மரீன் படைப்பிரிவு அதிகாரி ஒருவர் தெரிவித்தார். அந்த ஒளிப்பதிவு உண்மையானதெனவும் அறிவிக்கப்பட்டது.

அந்த விடயம் தொடர்பாக குற்றவியல் விசாரணை ஒன்றும், உள்ளக விசாரணை ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

ஆப்கான் ஜனாதிபதி ஹமிட் கர்சாயும், அமெரிக்க பாதுகாப்புச் செயலாளர் லியோன் பனெட்டாவும் (Leon Panetta) அமெரிக்க ராஜாங்கச் செயலாளர் ஹிலறி கிளின்ரனும் அந்தச் சம்பவத்தைக் கடுமையாக கண்டித்தார்கள்.



# 4200 பேர் சென்ற கப்பல்மூல்கியதில் 11 பேர் உயிரிழப்பு; 29 பேரை காணவில்லை கப்பலின் தலைவர் கைது

இத்தாலியின் கரைக்கு அப்பால் கடந்த வெள்ளிக்கிழமை தரை தட்டி விபத்துக்குள்ளாகிய உல்லாசப் பயணக் கப்பலில் காணாமற்போனவர்களை உயிருடன் மீட்பதற்கான வாய்ப்புக்கள் குறைந்து செல்வதாக அதிகாரிகள் தெரிவித்தார்கள்.

கப்பலினுள் பிரவேசித்து காணாமற்போனவர்களை தேடுவதற்கு வசதியாக, கப்பலில் குண்டு மூலம் மீட்புப் பணியாளர்கள் துவாரம் ஒன்றை ஏற்படுத்தினார்கள்.

கப்பலில் இருந்து திரவம் ஒன்று வெளியேறி வருகிறபோதிலும், அது எண்ணையென இன்னமும் உறுதி செய்யப்படவில்லை. எண்ணைக் கசிவு ஏற்பட்டால் அதனை எதிர்கொள்வதற்குத் தயாராக இருப்பதாக அதிகாரிகள் கூறினார்கள்.

Costa Concordia என்ற பெயரை உடைய உல்லாசப் பயணக் கப்பல், 4200 பேருடன் சென்றபோது, கடந்த வெள்ளிக்கிழமை பாறை ஒன்றில் மோதி விபத்துக்குள்ளாகிய பின்னர், கரையில் தரை தட்டியது. பதினொருவர் உயிரிழந்தமை உறுதி செய்யப்பட்டுள்ளது. 29 பேரைக் காணவில்லையென அறிவிக்கப்படுகிறது.

வெள்ளிக்கிழமை இத்தாலியின் கரையோரத்தில் ஏற்பட்ட உல்லாசப் பயணக் கப்பல் விபத்தின்போது, கப்பலின் தலைவர் தவறிழைத்தாரென கப்பல் நிறுவனம் அறிவித்தது.

உல்லாசப் பயணக் கப்பல் நிறுவனம் வெளியிட்ட அறிக்கை ஒன்றில், கோஸ்ரா கொன்கோர்டியா (Costa Concordia), கப்பலின் தலைவர் முன்னர் வெளியிட்ட கருத்துக்களை நிராகரித்தது.

கரைக்கு மிகவும் நெருக்கமாக உல்லாசப் பயணக் கப்பல் பயணம் செய்ததைப் போன்று தென்படுவதாகவும், அவசரகால முகாமைத்துவ நடைமுறைகள் பின்பற்றப்படவில்லையெனவும் அது குறிப்பிட்டது.

பயணிகள் அனைவரும் வெளியேற்றப்படுவதற்கு முன்பு, கப்பலின் தலைவர் கப்பலில் இருந்து வெளியேறி உயிர்காப்புப் படகொன்றில் ஏறிக் கொண்டாரென குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

கைமோசக் கொலைக் குற்றச்சாட்டின் அடிப்படையில் அவரை இத்தாலி அதிகாரிகள் கைது செய்துள்ளார்கள்.

# பதினைந்து முக்கிய நோய்களைக் கண்டுபிடிக்கக் கூடிய சிறிய கருவி ஒன்றைத் தயாரிப்போருக்கு பத்து மில்லியன் டொலர் பரிசு

மனிதர்களின் உடலில் இருந்து முக்கியமான தரவுகளைப் பெற்று, பதினைந்து முக்கியமான நோய்களைக் கண்டுபிடிக்கக் கூடிய சிறிய கருவி ஒன்றைத் தயாரிப்போருக்கு பத்து மில்லியன் டொலர் பரிசு வழங்கப்படுமென X Prize நிதியம் அறிவித்தது. Star Trek விஞ்ஞானப் புனைகதைத் தொலைக்காட்சித் தொடரில் பயன்படுத்தப்பட்ட கருவிப் போன்ற ஒன்றை விஞ்ஞானிகள் உருவாக்கவேண்டி இருக்கும். விண்வெளிக்கு பயணம் செய்யக்கூடிய மீளவும் பயன்படுத்தக்கூடிய விமானம் ஒன்றுக்கு, 2004 ஆம் ஆண்டு X Prize நிதியம் 10 மில்லியன் டொலர் பரிசை வழங்கியமை குறிப்பிடத்தக்கது.

# S.P. IMPORTERS

TEL: 416 261 3881

## FRESH VEGETABLE | FRUIT | GROCERY

## தைப்பொங்கலை முன்னிட்டு மலிவு விற்பனை





















































































## WE HAVE ALL KINDS OF TROPICAL FRUITS & VEGETABLE

மற்றும் பூசைக்குரிய தேவையான மாவிலை, வாழை இலை, முடித்தேங்காய், அறுகம்புல், விபூதி, சந்தனம், குங்குமம், நிறைகுட செற், குத்துவிளக்கு, மணி, காமாட்சி விளக்கு, செம்பு, பாய்வகைகள், ஊதுபத்தி, சாம்பிராணித்தட்டம், பித்தளைத்தட்டம், பித்தளை விளக்கு, அர்ச்சனைத்தட்டம், மண்சட்டிகள், பலவகைப்பட்ட சுவாமிபடங்கள், தெய்விக தன்மை வாய்ந்த நறுமணமிக்க பூஜை எண்ணெய் வகைகள், குங்கும சந்தன குப்பிகள், புகை இல்லாத கற்பூரம் மற்றும் இன்னும் பல வகைப்பட்ட மளிகைப் பொருட்கள் அனைத்தையும் பெற்றுக் கொள்ளலாம்.

மீன், இறைச்சி, கருவாடு அனைத்தையும் மலிவு விலையில் பெற்றக் கொள்ளலாம். Tel: 416 261 4737

## 2863 Lawrence Avenue East @ Brimley (Beside Tim Horton)

PRICES ARE SUBJECT TO CHANGE WITHOUT PRIOR NOTICE & SOME CONDITIONS APPLY

**பெற்றோரை இழந்து வாடும் சிறுவர்களை நிரந்தரமாகப் பாதுகாக்க C REP அமைத்துவரும் மயிலம்பாவெளி சிறுவர் இல்லக் கட்டிட நிதிக்காக**

**பிரபல நடன ஆசிரியர்கள் இணைந்து வழங்கும்**






# சலங்கைகளின் சங்கமமாக




# தாலாட்டு
## 2012

at

**Winston Churchill Collegiate Auditorium**
**Kennedy & Lawrence - Scarborough**

விபரங்களுக்கு - 416.799.5729 - childrenrep.org

**இந்த நிகழ்வுக்கு தமது பங்களிப்பை வழங்கும் நடன ஆசிரியைகளுக்கும், மாணவர்களுக்கும் C REP அமைப்பு நன்றி தெரிவித்துக்கொள்வதுடன் அவர்களின் கைகளைப் பாசத்துடன் பற்றிக்கொள்கின்றது.**

திருமதி. பத்மினி ஆனந்த்

திருமதி. வனிதா குகேந்திரன்

திருமதி. உசா நாகேஸ்வரன்

திருமதி. லலிதாஞ்சனா கதிர்காமன்

திருமதி. ரஜனி செல்வபிரகாசம்

திருமதி. அற்புதராணி கிருபராஜ்

திருமதி. கௌரி பாபு

திருமதி. ரஜனி மதிவர்மன்

திருமதி. கௌசிகா இராஜகுமாரன்

திருமதி. சித்திரா தர்மலிங்கம்

திருமதி. பூங்குழலி இளங்குமரன்

திருமதி. நிரஞ்சலா நந்தகுமார்

திருமதி. செந்தில்செல்வி சுரேஸ்வரன்

மீரா கனகேஸ்வரன்

குமாரி. சுசி நல்லையா

செல்வி. அபிராமி அருமருகன்

செல்வி. ரூபினி தெய்வேந்திரன்

செல்வி. நிவேதா இராமலிங்கம்

நன்றி




## கனடிய தமிழர் விளையாட்டுத்துறையால் நடாத்தப்படும்

## (C.T.S.A)

# பரிசளிப்பு விழா 2012

கனடாவில் விளையாட்டுதுறையில் வளர்ந்து வரும் எமதுவீரர்களை

ஊக்குவிக்கும் ஒரு நிகழ்வாகவும்,

சமூகத்தில் அடையாளம் காணப்பட்ட சிறப்புமிக்க விளையாட்டு வீரர்களை

கௌரவிக்கும் ஒரு நிகழ்வாகவும்

அமைந்திருக்கும் இந்நிகழ்வில்

பங்கெடுத்து சிறப்பிக்குமாறு விளையாட்டாளர்கள், ஆர்வலர்கள்

அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்




Freedom Record Entertinmet வழங்கும்

செந்தூரான் அழகையாவின் எழுச்சிமிக்க

இன்னிசை விருந்து

மற்றும்

நடன நிகழ்ச்சிகள்

தொடர்புகளுக்கு: 647 406 0307, 647 274 9366, 647 408 4906

**Stephen Leacock Collegiate Auditorium**

2450 Birchmount Road (Leacock Building), Toronto, ON M1T 2M5

இந்திய அரசியல்

# தமிழக அமைச்சரவை மீண்டும் மாற்றம் முதல்வர் ஜெயலலிதா அதிரடி



தமிழக அமைச்சர்களை மீண்டும் மாற்றியமைத்து முதல்வர் ஜெயலலிதா உத்தரவிட்டுள்ளார். அதன்படி, சி.வி. சண்முகத்திற்கு வணிகவரி மற்றும் பதிவுத்துறை வழங்கப்பட்டுள்ளது. அக்ரி கிருஷ்ணமூர்த்தி, பள்ளிக்கல்வி மற்றும் விளையாட்டுத்துறை, எஸ்.பி.வேலுமணிக்கு வருவாய்த்துறை, பி. தங்கமணிக்கு சுரங்கம், கனிமம் மற்றும் தொழில்துறை வழங்கப்பட்டுள்ளது. முதல்வர் ஜெயலலிதா பரிந்துரையிலான இந்த மாற்றத்திற்கு கவர்னர் ரோசைய்யா ஒப்புதல் அளித்துள்ளார்.

தமிழக அமைச்சரவையில் ஏற்கனவே நான்கு முறை மாற்றம் செய்யப்பட்டது. இது தவிர, இலாகாக்களும் அவ்வப்போது மாற்றப்பட்டன. இறுதியாக நடைபெற்ற மாற்றத்தில், தமிழக அமைச்சரவையில் இருந்து, பரஞ்ஜோதி ராஜினாமா செய்தார். செல்வி ராமஜெயம் பதவி பறிக்கப்பட்டுள்ளது. இவர்களுக்கு பதிலாக, இந்து சமய அறநிலையத் துறை அமைச்சராக திருப்பூர் ஆனந்தனும், சமூகநலத் துறை அமைச்சராக வளர்மதியும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

# ஆந்திராவில் வரலாறு காணாத பனிப்பொழிவு: 15 பேர் பலி

இந்திய மாநிலமான ஆந்திராவின் வட மாவட்டங்களில் கடுங்குளிர் நிலவி வருவதால் கடந்த 2 திகதிகளில் பனியின் தாக்கத்தினால் 15 பேர் பலியாகியுள்ளனர்.

ஆந்திராவின் 23 மாவட்டங்களில் கடுங்குளிர் நிலவுதால் நகரமெங்கும் பனிமூட்டம் நிறைந்து காணப்படுவதாகவும், குறிப்பாக இம்மாவட்டங்களில் 9 டிகிரிக்கும் குறைவாக வெப்பம் உள்ளதாகவும் தகவல் வெளியாகியுள்ளன.

இந்த பனியால் ஆந்திராவின் கரீம் மாவட்டத்தில் 5 பேரும், விசாகப்பட்டினம், குண்டூர் ஆகிய மாவட்டங்களில் தலா 4 பேரும், வாராங்கல், நல்கொண்டா மாவட்டங்களில் தலா ஒருவரும் இன்னும் சில மாவட்டங்களில் பனிக்கு கடந்த இரு நாட்களில் 15 பேர் பலியாகியுள்ளனர்.

# ஐயப்ப பக்தர் வென்னீர் ஊற்றிக் கொல்லப்பட்டது கொடூரமானது; நாம் தமிழர் கட்சி கடும் கண்டனம்



சபரிமலைக்குச் சென்ற சென்னை, திருவொற்றியூரைச் சேர்ந்த ஐயப்ப சாமி பக்தர் சாந்தவேலு, பம்பை நதி அருகே தேநீர் அருந்தச் சென்றபோது கடைக்காரருடன் வாக்குவாதம் ஏற்பட்டதாகவும், அப்போது கடைக்காரர் அவர் மீது வென்னீர் ஊற்றித் தாக்கியதால் ஏற்பட்ட கடுமையான தீக்காயங்களால் உயிரிழந்துள்ளார் என்ற செய்தி பெரும் வேதனையளிக்கிறது.

கடந்த 8ஆம் தேதி பம்பையில் இந்தச் சம்பவம் நடந்துள்ளது. வென்னீர் ஊற்றியதால் இடுப்பிலும், முதுகிலும் ஏற்பட்ட கடுமையான தீக்காயங்களுடன் கோட்டயம் மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட சாந்தவேலுவின் உடல் நிலை மோசமானதையடுத்து, அவரது மனைவியும் உறவினர்களும் அவரை சென்னைக்கு அழைத்து வந்து கீழ்ப்பாக்கம் அரசு மருத்துவமனையில் சேர்த்துள்ளனர். அங்கு சிகிச்சை பலனிக்காத நிலையில், திங்கட்கிழமை சாந்தவேலு உயிரிந்துள்ளார்.

# ராஜபக்ச அச்சமின்றி வாழ உதவும் காங்கிரஸ்-திமுக: பழ.நெடுமாறன்

தமிழகத்தில் 7 கோடி தமிழர்கள் இருந்தும் ராஜபக்சே பயமில்லாமல் இருப்பதற்குக் காரணம் மத்தியில் ஆளும் காங்கிரஸ் அரசும், அதற்கு வால் பிடிக்கும் திமுகவும் தான் என்று தமிழர் தேசிய இயக்கத் தலைவரான பழ. நெடுமாறன் கூறினார்.

சசிகலாவின் கணவர் ம.நடராஜன் நடத்தும் நடராஜன் மருதப்பா அறக்கட்டளை சார்பில் தஞ்சாவூரில் பொங்கல் பண்டிகையை முன்னிட்டு நடந்த தமிழர் கலை இலக்கிய விழாவில் பங்கேற்று நெடுமாறன் பேசுகையில், இலங்கையில் ஒரு கோடி சிங்களர்கள் வாழ்கின்றனர். ஈழப் போருக்கு முன்னதாக அங்கு 45 லட்சம் தமிழர்கள் வாழ்ந்தனர். அவர்களில் 3 லட்சம் பேர் போரில் கொல்லப்பட்டு விட்டனர். 5 லட்சம் தமிழர்கள் வெளிநாடுகளுக்கு குடிபெயர்ந்துள்ளனர். இன்னும் 5 லட்சம் தமிழர்கள் இலங்கையின் வட கிழக்குப் பகுதிகளிலேயே அகதிகளாக, சிங்களர்களின் கொடுமைகளை அனுபவித்து வருகின்றனர்.

இப்போது ஈழத்தில் தமிழர்கள் வாழ்ந்த பகுதிகளில் சிங்களர்கள் குடியேர்ந்து, அங்கிருந்த தமிழ் அடையாளங்களை அழித்து வருகின்றனர்.

ஈழத்திலிருந்து 20 மைல் தொலைவில் உள்ள தமிழகத்தில் 7 கோடி தமிழர்கள் உள்ளனர். இருந்தும், ஈழப் போருக்கு எதிராகத் தமிழகத்தில் எழுந்த எதிர்ப்புகள், போராட்டங்கள் குறித்து ராஜபக்சேவுக்கு பயம் வரவில்லை. இதற்குக் காரணம் இந்திய அரசும், அதற்கு வால்பிடித்து வந்த முந்தைய திமுக அரசும்தான். மத்தியில் ஆளும் காங்கிரஸ் அரசு தமிழர்களுக்கு எதிரானது. தமிழர்களின் குரல்களை இந்திய அரசு மதிக்காததற்கும், அன்றைய திமுக அரசுதான் காரணம். தமிழர்கள் வரலாற்றில் மாறாத அவமானக் கறையாக இந்த நிகழ்வுகள் அமைந்து விட்டன.

இந்தக் கறையைத் துடைத்தெறிய, தமிழர்களுக்கு எதிரான அரசுகளையும், கட்சிகளையும் அடை யாளம் கண்டு ஒதுக்க வேண்டும். மீண்டும் ஈழத்தில் தமிழ் விடுதலைப் போர் வெடிக்கும் என்றார் நெடுமாறன்.

# திரைப்படம்

## வேட்டையும் நண்பனும்!

வேட்டை

பொங்கல் விடுமுறைக்கு விஜய் நடிக்கும் நண்பன், மாதவன், ஆர்யா நடிக்கும் வேட்டை என இரண்டு படங்கள் வெளியாகின. அப்படங்கள் குறித்து ஒரு பார்வை:

**நண்பன்:** ஷங்கர் இயக்கத்தில் விஜய் நடித்து இருப்பதால் இப்படத்திற்கு பெரும் எதிர்ப்பார்ப்பு நிலவி வந்தது. அதனை பூர்த்தி செய்யும் வகையில் 12ம் தேதியே படத்தினை வெளியிட்டார்கள்.

12, 13 உள்ளிட்ட தேதிகளில் எந்த படமும் வெளியாகாததால் நண்பன் படம் தமிழகம் முழுவதும் பல தியேட்டர்களில் அரங்கு நிறைந்த காட்சிகளாக நன்றாக கல்லா கட்டியது.

வழக்கமான மாஸ் படத்தினை போல இல்லாமல் விஜய்யின் எதார்த்தமான நடிப்பு, ஷங்கரின் பிரம்மாண்டமான இயக்கம், இந்தியில் வரவேற்பைப் பெற்ற கதை என படம் பார்க்க வரும் ரசிகர்களை நண்பனாக்கி இருக்கிறது் நண்பன்.

**வேட்டை:** மாதவன், ஆர்யா நடிப்பில் லிங்குசாமி இயக்கத்தில் வெளியாகி இருக்கும் படம். ரன், பையா படத்தினை போல, இளமைத் துள்ளலுடன் திரைக்கதை அமைத்து இருக்கிறார் லிங்குசாமி.

மாதவன், ஆர்யா, சமீரா ரெட்டி, அமலா பால் நடிப்பு, லிங்குசாமி வேகமான திரைக்கதை அமைப்பு உள்ளிட்டவை படம் பார்க்கும் ரசிகர்களை கவர்ந்து இருக்கிறது.

ரசிகர்களை மனதை வேட்டையாடி வருகிறது வேட்டை. இதுவரை தாவணியில் வலம் வந்த அமலா பால், இப்படத்தில் கட்டிப்புடி என்னை கட்டிப்புடி பாடலில் கவர்ச்சிகரமான உடைகளில் ஆடியிருக்கிறார்.

நண்பன் படத்திற்கு இருந்த எதிர்பார்ப்பு, வேட்டை படத்திற்கு யு.டிவி நிறுவனத்தின் விளம்பர யுத்தி, இரண்டு படங்களுக்குமே அரசாங்கத்தில் இருந்து கிடைத்த வரி விலக்கு என தமிழ் திரையுலகத்திற்கு 2012 நல்லதொரு தொடக்கமாக அமைந்து இருக்கிறது



## தொடங்குகிறது கோச்சடையான்!

ரஜினி உடல்நிலை சரியான பிறகு நடிக்க இருக்கும் படம் கோச்சடையான். கே.எஸ்.ரவிக்குமார் மேற்பார்வையில் சௌந்தர்யா ரஜினிகாந்த் இயக்க இருக்கிறார். ஏ.ஆர்.ரஹ்மான் இசையமைக்க, சினேகா ரஜினிக்கு தங்கையாக நடிக்க ஒப்பந்தமாகி இருக்கிறார்.

படத்தினை பற்றி பல்வேறு தகவல்கள் வெளியாகி வந்தாலும் படப்பிடிப்பு எப்போது ஆரம்பிக்க இருக்கிறார்கள் என்பது மட்டும் தெரியாமல் இருந்தது. இப்போது படப்பிடிப்பு பற்றிய தகவல்கள் வெளியாகி உள்ளன.

கோச்சடையான் படத்தின் படப்பிடிப்பு வரும் 19ம் தேதி ஏ.வி.எம் பிள்ளையார் கோவிலில் தொடங்க இருக்கிறது. அங்கு ரஜினிகாந்த் மற்றும் சினேகா சம்பந்தப்பட்ட காட்சிகளை படமாக்க இருக்கிறார்கள்.

கோச்சடையான் படத்தில் ரஜினி, சினேகா உடன் ஆதி (மிருகம், ஈரம்) நடிக்க இருக்கிறாராம். இதற்காக சௌந்தர்யா ரஜினிகாந்த் ஆதியை சந்தித்து பேசி இருக்கிறார்.

ஜனவரி 17 அன்று ஏ.ஆர்.ரஹ்மானை மும்பையில் சந்தித்தார் சௌந்தர்யா ரஜினிகாந்த்.

கோச்சடையான் படத்திற்காக ஜெர்மன் இசை கலைஞர்கள் சுமார் 130 பேர் ஒன்றிணைந்து ஒரு பாடலுக்கு இசையமைக்க இருக்கிறார்கள். ஏ.ஆர்.ரஹ்மானுடன் பணிபுரிவது பற்றி சந்தோஷத்தில் இருக்கிறார் சௌந்தர்யா.

## அஜித் படத்தில் ஆர்யா?

அஜித் விஷ்ணுவர்தன் இணையும் படத்திற்கு பெரும் எதிர்பார்ப்பு தமிழ் திரையுலகில் நிலவி வருகிறது. ஏ.எம். ரத்னம் தயாரிக்கும் இப்படத்திற்கு யுவன் சங்கர் ராஜா இசையமைக்க ஒப்பந்தம் செய்யப்பட்டு இருக் கிறார்.

இப்படத்தில் அஜித்துடன் இணைந்து ஒரு முக்கிய வேடத்திற்கு விஷ்ணுவர்தனின் தம்பி கிருஷ்ணா நடிப்பார் என்று தகவல்கள் பரவியது. ஆனால் கிருஷ்ணா அத்தகவலை மறுத்தார்.

விஷ்ணுவர்தனின் அறிந்தும் அறியாமலும், பட்டியல், சர்வம் ஆகிய படங்களில் நடித்தார் ஆர்யா. விஷ்ணுவர்தனும் ஆர்யாவும் நெருங்கிய நண்பர்கள். அஜித்துடன் இணையும் படத்தில் இருக்கும் மற்றொரு முக்கிய வேடத்திற்கு ஆர்யாவை ஒப்பந்தம் செய்ய நினைத்தாராம் விஷ்ணுவர்தன்.

ஆர்யா இப்படத்தில் நடிக்க பெரும் ஆர்வத்தோடு இருந்தாலும், தற்போது செல்வராகவன் இயக்கும் இரண்டாம் உலகம் படத்திற்கு தனது தேதிகளை ஒதுக்கி கொடுத்து விட்டதால், என்ன செய்வது என்று யோசித்து வருகிறாராம்.

## ஓங்கி அடிச்சா..!

சூர்யா, அனுஷ்கா, விவேக், பிரகாஷ்ராஜ் நடிப்பில் ஹரி இயக்கத்தில் வெளியான படம் சிங்கம். ஸ்டுடியோ கிரீன் தயாரித்த இப்படத்தினை சன் பிக்சர்ஸ் வெளியிட்டது.

இப்படத்திற்கு மாபெரும் வரவேற்பு கிடைத்தை அடுத்து இந்தியிலும் ரீமேக் செய்யப்பட்டு அங்கும் வரவேற்பை பெற்றது. இந்நிலையில் மீண்டும் ஹரி - சூர்யா கூட்டணி இணைய இருக்கிறார்கள். மாற்றான் படத்தினைத் தொடர்ந்து ஹரி இயக்கத்தில் நடிக்க இருக்கிறார் சூர்யா.

சூர்யாவிற்கு யார் நாயகி என்று நடந்த போட்டியில் மீண்டும் வென்று இருக்கிறார் அனுஷ்கா. அனுஷ்காவோடு மற்றொரு நாயகியும் நடிக்க இருக்கிறாராம். அதற்கான தேர்வு நடைபெற்று வருகிறது. சூர்யா, அனுஷ்கா, சந்தானம் உள்ளிட்டோர் ஒப்பந்தமாகி இருக்கிறார்கள். மார்ச் மாதம் இதற்கான படப்பிடிப்பு நடைபெற இருக்கிறது. இது சிங்கம் படத்தின் இரண்டாம் பாகமா? படத்தின் தலைப்பு என்ன என்பது கூடிய விரைவில் தெரிய வரும். சிங்கம் போலவே காமெடிக்கும், ஆக்ஷனுக்கும் முக்கியத் துவம் கொடுத்து திரைக்கதையை அமைத்து இருக்கிறாராம் ஹரி.

# மரண அறிவித்தல்







தோற்றம்
22 சனவரி 1923

மறைவு
14 சனவரி 2012

# திரு வேலுப்பிள்ளை துரையப்பா கந்தையா (பரமர்)

## (முன்னாள் பிரபல வர்த்தகர் கொழும்பு)

வேலணை மேற்கைப் பிறப்பிடமாகவும், நாரந்தனை தெற்கை வசிப்பிடமாகவும், தற்போது கனடா மார்க்கத்தை வதிவிடமாகவும் கொண்ட வேலுப்பிள்ளை துரையப்பா கந்தையா அவர்கள் 14-01-2012 சனிக்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார்.

அன்னார், துரையப்பா, நாகரெத்தினம் தம்பதிகளின் அன்பு மகனும், திருநாவுக்கரசு, செல்லாச்சி தம்பதிகளின் அன்பு மருமகனும்,

சகுந்தலா (பேபி அக்கா) அவர்களின் அன்புக் கணவரும்,

சண்முகநாதன் (முன்னாள் யாழ். பல்கலைக் கழக விரிவுரையாளர் - லண்டன்), புஸ்பராணி (பிரான்ஸ்), காலஞ்சென்ற சற்குருநாதன், மற்றும் ரவீந்திரநாதன் (ஜேர்மனி), ஜெயராணி (கனடா) ஆகியோரின் அன்புத் தந்தையும்,

நந்தினி (லண்டன்), காலஞ்சென்ற சிவமனோகரன், அகிலேஸ்வரி (ஜேர்மனி), சிவயோகநாதன் (மோகன் - கனடா) ஆகியோரின் அன்பு மாமனாரும்,

காலஞ்சென்றவர்களான தியாகராசா, அன்னபூரணி, பொன்னு, மங்கையர்கரசி, கைலாசபிள்ளை, இராமசாமி ஆகியோரின் அன்புச் சகோதரனும்,

காலஞ்சென்றவர்களான சரஸ்வதி, பொன்னம்பலம், சண்முகம் மற்றும் ஐயாத்துரை (இலங்கை), பரமேஸ்வரி (இலங்கை), மகாலக்சுமி (கனடா), சரோஜினிதேவி (கனடா), மோகனாம்பாள் (இலங்கை), மல்லிகாதேவி (இலங்கை), தனலட்சுமி (இலங்கை), பௌஸ்ராதேவி (இலங்கை), சிவநாதன் (பிரான்ஸ்) ஆகியோரின் அன்பு மைத்துனரும்,

காலஞ்சென்ற லோகநாதபிள்ளை, பாலசுப்பிரமணியம் மற்றும் சீவரத்தினம், அரசரெத்தினம் ஆகியோரின் அன்புச் சகலனும், பாமா அவர்களின் அன்பு உடன்பிறாவச் சகோதரனும்,

நிலானி, சாரபி, ரஜீதன், சிறானி, மாதுரி, சுபாங்கி, சுபைதா, தீபக், மிதிலன், வைஷ்ணவி ஆகியோரின் அன்புப் பேரனும் ஆவார்.

அன்னாரின் பூதவுடல் சனிக்கிழமை 21-01-2012, பி.ப 04:00 மணி தொடக்கம் 09:00 மணி வரையும், ஞாயிற்றுக்கிழமை 22-01-2012, காலை 08:30 மணி தொடக்கம் 10:00 மணி வரையும் 8911 Woodbine Ave, Markham, ON L3R 5G1 அமைந்துள்ள Chapel Ridger Funeral Homeஇல் பார்வைக்கு வைக்கப்பட்டு அதே மண்டபத்தில் ஞாயிற்றுக்கிழமை 22-01-2012, காலை 10:00-12:00 மணிவரை கிரிகைகள் இடம்பெற்று, ஞாயிற்றுக்கிழமை 22-01-2012, பி.ப 12:00 மணிக்கு 1581 Elgin Mills Road, Richmound Hill , ON L4S 1M9 இல் அமைந்துள்ள Elgin Mills Cemetory இல் தகனம் செய்யப்படும்.

இவ் அறிவித்தலை உற்றார், உறவினர், நண்பர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

• • • • • • •

தகவல்: குடும்பத்தினர்.
தொடர்புகளுக்கு:
மனைவி (கனடா) - 905-554-8102
ஜெயா - மோகன் (மகள்) (கனடா) செல்லிடப்பேசி: 416-577-3225
சண் (மகன்) (பிரித்தானியா) தொலைபேசி: 442083299890
கலா (மகள்) (பிரான்ஸ்) தொலைபேசி: 33145165250
ரவி (மகன்) (ஜெர்மனி) தொலைபேசி: 492511447863

இவ் அறிவித்தலை www.worldtamils.com இணையத்தளத்தில் உலகெங்குமிருந்து பார்வையிட முடியும்.

மருத்துவம்

# தீ விபத்தில் இருந்து தப்பிப்பது எப்படி?

சமையல் செய்வது உள்ளிட்ட சில சந்தர்ப்ப சூழ்நிலைகளால் தீக்காயம் ஏற்பட்டு விடுகிறது. பிற விபத்துகளின் மூலமாக ஏற்படும் காயத்திற்கும், தீக்காயத்திற்கும் நிறைய வேறுபாடுகள் இருப்பதால், இரண்டுக்கும் ஒரே மாதிரியான சிகிச்சையை நாமாகவே எடுத்துக்கொள்ளக்கூடாது.

சமையல் செய்யும்போது கையில் தீக்காயம் ஏற்பட்டால், உடனடியாக அந்த வெப்பத்தை வெளியேற்றுவது அவசியம். அதற்கு, தீக்காயம் ஏற்பட்ட கையை தண்ணீரில் மூழ்கச் செய்ய வேண்டும். தீக்காயம் உருவான இடத்தில் ஐஸ் கட்டிகளை வைத்தும் வெப்பத்தை வெளியேற்றலாம். இது தான், இந்த வகை தீக்காயத்திற்கு நாம் செய்யும் முதலுதவி. பிறகு, தகுந்த மருத்துவரிடம் சென்று சிகிச்சை பெற வேண்டும்.

தீப்புண்ணில் கிருமிகள் இருக்காது என்பதால் பிறர் கைகளில் உள்ள அசுத்தம் புண்ணில் படாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். பொதுவாக தீ விபத்துக்கு உள்ளானவர்கள் அதிகம் பாதிக்கப்படுவது மன அளவில்தான். அதாவ்து, அதிக அதிர்ச்சிக்கு ஆளாகிறார்கள். அதனால் பாதிக்கப்பட்டவர் பதற்றப்படுவதை தவிர்க்க வேண்டும்.

தீ விபத்தால் பாதிக்கப்பட்ட ஒருவரது உடல் பகுதிக்கு அதிக அளவில் ரத்தம் பாய்வதால் மற்ற உடல் பகுதிகளில் ரத்த ஓட்டம் குறையும். இதன் காரணமாக, அவரது உடல் ஜில்லென்று ஈரமாக இருக்கும். ஜீரண சக்தியும் அதிக அளவில் குறைந்து விடும். இதுபோன்ற நேரங்களில் பாதிக்கப்பட்டவர் சாப்பிட விரும்பினால் தண்ணீர் அல்லது லேசான தேயிலை பானம் போன்ற நீர் ஆகாரம் மட்டுமே தர வேண்டும்.

மேலும், ஆடையில் தீப்பற்றுவதன் மூலம் தீ விபத்தைச் சந்திப்பவர்கள் அதில் இருந்து விடுபட ஓடுவார்கள். அது தவறு. அவ்வாறு ஓடினால் வேகமாக காற்றோட்டம் உடலில் ஏற்பட்டு தீ வேகமாக பரவும். பக்கத்தில் இருப்பவர்கள், தீப்பற்றியவர் மீது தண்ணீர் ஊற்றி தீயை அணைப்பதுதான் சிறந்த தடுப்பு முறை.

அதேநேரம், மண்எண்ணெய், பெட்ரோல் உள்ளிட்ட எண்ணெய் பொருட்களால் தீ விபத்து நிகழ்ந்தால் அங்கே தண்ணீர் ஊற்றக்கூடாது. மீறி ஊற்றினால் அது எரிகின்ற எண்ணெயை மேலும் பரவச் செய்து விடும்.



# புற்று நோயை தடுக்கும் மாதுளை

எல்லோரும் விரும்பி சாப்பிடும் மாதுளை நிறைய மருத்துவ மகிமைகள் கொண்டது. தொடர்ந்து மாதுளம்பழம் சாப்பிட்டு வருபவர்களுக்கு புற்றுநோய் ஏற்படும் வாய்ப்புகள் மிகக்குறைவு என்று கண்டு பிடித்து இருக்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள்.

சமீப காலமாக உலகம் முழுக்க புற்றுநோயால் பாதிக்கப்படுபவர்கள் எண்ணிக்கை அதிகமாகி வருகிறது. குறிப்பாக, மார்பக புற்றுநோயால் பெண்கள் அதிகம் பாதிக்கப்படுகின்றனர். 4 இல் 3 பெண்களுக்கு மார்பக புற்றுநோய் ஏற்படலாம் என கணிக்கப்பட்டுள்ளது.

இந்நிலையில், ஒருவர் தொடர்ந்து மாதுளம் பழம் சாப்பிட்டு வந்தால் புற்றுநோயிலிருந்து தப்பிக்க முடியும் என்று ஆராய்ச்சியாளர்கள் கண்டறிந்துள்ளனர். மனிதர்கள் மற்றும் விலங்குகளுக்கு மாதுளம்பழத்தை கொடுத்து இந்த ஆய்வு செய்யப்பட்டது.

மாதுளம்பழத்தில் இயற்கையாகவே பைட்டோ கெமிக்கல் உள்ளது. எல்லஜிக் அமிலம் என்று அழைக்கப்படும் இது, புற்றுநோய் செல்கள் வளர்வதைக் கட்டுப்படுத்த உதவுகிறது. இதன் மூலம் மார்பக புற்றுநோய்க்கு காரணமான செல்கள் மற்றும் கட்டி வளர்வது தடுக்கப்படுகிறது.

அதேநேரம்; இது ஆய்வக முடிவுதான். நிஜமாக இது சாத்தியமா என்பதை உறுதியாக கூற இயலாது் என்கிறார், அமெரிக்காவின் ஓஹியோ ஸ்டேட் யுனிவர்சிட்டி இன்டர்னல் மெடிசின் துறை பேராசிரியர் கேரி ஸ்டோனர்.

# புற்றுநோய் பாதிப்பை தடுக்கும் நீரிழிவு மருந்துகள்! ஆய்வில் தகவல்



டைப் 2 நீரிழிவு நோய்க்காக உட்கொள்ளப்படும் மருந்துகள் புற்றுநோய் செல்களை கட்டுப்படுத்தும் என்றும் சமீபத்திய ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது. ஆனால் அந்த மருந்துகள் எவ்விதம் செயல்புரிகின்றன என்பது க்ண்டறியப்படவில்லை என்று தென்கொரியா் ஆய்வாளர்கள் கூறியுள்ளனர்.

தென்கொரியா நாட்டின் சியோல் தேசிய பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் ஜேம்ஸ் டிராஸ்கோ, ஏராளாமான நீரிழிவு நோயாளிகளிடம் இந்த ஆய்வினை மேற்கொண்டார். அப்போது டைப் 2 நீரிழிவினால் பாதிக்கப்பட்ட நோயாளிகள் உட்கொள்ளும் மருந்துகள் மார்பு, கல்லீரல், லிவர் போன்ற இடங்களில் புற்றுநோய் தோன்றுவதை தடுப்பதாக கண்டறியப்பட்டதாக தெரிவித்தார். புற்று நோய் செல்கள் ஏற்பட்டாலும், இந்த மருந்துகள் செல்கள் வளர்ச்சியடைவதை தடுப்பதாகவும் கூறியுள்ள ஜேம்ஸ், அது எவ்விதம் செயல்புரிகிறது என்று கண்டறியப்படவில்லை என்று தெரிவித்துள்ளார்.

## ஈஸ்ட்ரோஜன் சுரப்பு

மார்பகப் புற்றுநோய் தாக்கியவர்களின் தசைகளை சிறிதளவு எடுத்து ஆய்வுக்கு உட்படுத்தினர். அப்போது நீரிழிவு மாத்திரைகள் மூலம் மார்பகத்தில் புற்றுநோய் செல்களின் வளர்ச்சி குறையத்தொடங்கியதையும், மேலும் ஈஸ்ரோஜன் சுரப்பும், மார்பகத்தின் வளர்ச்சியும் அதி கரித்ததும் ஆய்வில் தெரியவந்தது. மார்பகப் புற்று நோய் தாக்கியவர்களுக்கு ஈஸ்ரோஜன் சுரப்பதில் மாறுபாடு ஏற்பட்டது. அதேசமயம், நீரிழிவு மாத்திரைகள், ஈஸ்ரோஜன் சுரப்பை சரிசமமாக கட்டுப்படுத்தியது.



# 12ஆம் ஆண்டு நினைவஞ்சலி

## அமரர் மாரிமுத்து குகதாசன் (புட்டர்)



மலர்வு: 08-12-1959 | உதிர்வு: 02-02-2000
திதி: 01-02-2012

பன்னிரண்டு ஆண்டுகள் ஓடி மறைந்தாலும் உங்கள்
பாச நினைவலைகள் என்றும் எமைவிட்டு அகலாது
கழிந்தவை ஆண்டுகள் தானன்றி உங்கள் ஞாபகங்கள் அல்ல
உங்கள் பந்தத்தில் விளைந்த முத்துக்கள் இன்று
பாசத்திற்கு ஏங்கித் தவிக்கின்றனர்...
அந்த அன்பான சிரித்த முகத்தை மரணம் மறைத்தாலும்
எங்கள் மனங்களில் என்றும் மறையாது உம் நினைவலைகள்

நீங்கள் இல்லாத பதினொரு ஆண்டுகளும்
உங்கள் அன்புக்கு இணையாக
தந்தையாய் நின்ற தம்பியும், இன்று உங்கள் அருகே...
பாசத்தை ஈர்ந்து பார் போற்ற வளர்த்த
பாச மாமாவையும் இழந்து ஏங்கித் தவிக்கின்றனர்...

என்றும் உங்கள் நினைவுகளுடன் வாடும்
மனைவி, பிள்ளைகள், உற்றார், உறவினர்கள்.
தொடர்புகளுக்கு: 416-332-9544

# விளையாட்டரங்கு

## இலங்கைக்கு மீண்டும் தோல்வி தொடரை கைப்பற்றியது தென்னாபிரிக்கா



இலங்கை மற்றும் தென்னாபிரிக்க அணிகளுக்கு இடையிலான புலோம் பண்டேயினில் நடைபெற்ற மூன்றாவது ஒரு நாள் போட்டியில் இலங்கை அணி டக்வத் லூயிஸ் முறையில் 4 ஓட்டங்கள் வித்தியாசத்தில் தோல்வி அடைந்துள்ளது. இதன் மூலம் 5 போட்டிகள் கொண்ட தொடரை தென்னாபிரிக்க அணி 3:0 என இலகுவாக கைப்பற்றியது.



## மூன்றாவது டெஸ்டிலும் இந்தியா தோல்வி: தொடரை கைப்பற்றியது அவுஸ்திரேலியா

அவுஸ்திரேலியா மற்றும் இந்திய அணிகளுக்கு இடையிலான மூன்றாவது டெஸ்ட் போட்டியிலும் இந்திய அணி 37 ஓட்டங்களால் தோல்வியடைந்ததோடு அவுஸ்திரேலிய அணி இப்போட்டியில் வெற்றி பெற்றதன் மூலம் தொடரை கைப்பற்றியது.

ஒரு போட்டி மீதமுள்ள போதும், நான்கு போட்டிகள் கொண்ட தொடரை 3:0 என அவுஸ்திரேலியா வெற்றி கொண்டுள்ளது.

பேர்த்தில் இடம்பெற்ற இப்போட்டியில் இந்தியா தனது முதல் இன்னிங்ஸில் 161 ஓட்டங்களையும் அவுஸ்திரேலியா தனது முதல் இன்னிங்ஸில் 369 ஓட்டங்களையும் பெற்றன. பதிலுக்கு தனது இரண்டாவது இன்னிங்ஸிற்காக களமிறங்கிய இந்திய அணி 171 ஓட்டங்களுக்கு சகல விக்கெட்டுக்களையும் இழந்தது. இதனால் இன்னிங்ஸாலும் 37 ஓட்டங்களாலும் தோல்வியை தழுவியது.

## 100வது அவுஸ்திரேலிய ஓபன் டென்னிஸ் போட்டி



அவுஸ்திரேலியாவின் மெல்போர்ன் நகரில் 100வது அவுஸ்திரேலிய ஓபன் டென்னிஸ் தொடர் நடக்கிறது.

நடைபெற்ற ஆண்கள் ஒற்றையர் பிரிவு முதல் சுற்றில் நடப்பு சாம்பியன் ஜோகோவிச், இத்தாலியின் லோரன்ஜியை சந்தித்தார். இதில் அபாரமாக ஆடிய ஜோகோவிச் 6:2, 6:0, 6:0 என்ற நேர் செட்டில் வெற்றி பெற்று இரண்டாவது சுற்றுக்கு முன்னேறினார்.

மற்றொரு முதல் சுற்றுப் போட்டியில் இங்கிலாந்தின் ஆன்டி முர்ரே, அமெரிக்காவின் ரேயான் ஹாரிசனை எதிர் கொண்டார். இதில் முர்ரே 4:6, 6:3, 6:4, 6:2 என்ற செட் கணக்கில் வெற்றி பெற்று, இரண்டாவது சுற்றுக்கு தகுதி பெற்றார். இப்போட்டியின் முதல் சுற்றில் செக்குடியரசின் பெட்ரா கிவிட்டோவா, ரஷ்யாவின் டுஷிவினாவை 6:2, 6:0 என்ற நேர் செட் கணக்கில் வீழ்த்தி இரண்டாவது சுற்றுக்கு முன்னேறினார். மற்றொரு முதல் சுற்றுப் போட்டியில், அவுஸ்திரேலியாவின் சமந்தா ஸ்டோசுர், ருமேனியாவின் சோரானா சிர்ஸ்சிடியாவை எதிர்கொண்டார். இதில் ஸ்டோசுர் 6:7, 3:6 என்ற நேர் செட்டில் அதிர்ச்சி தோல்வி அடைந்து வெளியேறினார்.

மற்றொரு ஆட்டத்தில் ரஷ்யாவின் ஷரபோவா 6:0, 6:1 என்ற நேர் செட்டில் அர்ஜென்டினாவின் கிசிலா டல்கோவை வீழ்த்தினார்.

## மோசமான ஆட்டத்தை தொடர்ந்து கப்டன் பதவியிலிருந்து தோனி விலகுவாரா?

அவுஸ்திரேலியாவில் தொடர்ந்து இந்திய அணி மோசமான தோல்வியை தொடர்ந்து லஷ்மன் உள்ளிட்ட மூத்த வீரர்களின் எதிர்காலம் கேள்விக்குறியாகியுள்ளது. 6 இன்னிங்சில் விளையாடியுள்ள லஷ்மண் வெறும் 102 ஓட்டங்கள் மட்டுமே எடுத்துள்ளார். சராசரியாக 17 ஓட்டங்கள் வீதம் ஒரு அரைசதம் மட்டும் எடுத்துள்ளார். கடந்த ஆண்டு இங்கிலாந்து தொடரிலும் லஷ்மன் மோசமான ஆட்டத்தையே வெளிப்படுத்தியுள்ளார்.

இதனிடையே அவுஸ்திரேலியா தொடர் முடிந்ததும் லஷ்மன் ஓய்வு பெற்றுவிடுவார் என உறுதிசெய்யப்படாத தகவல்கள் தெரிவிக்கின்றன. இது பற்றி கப்டன் தோனியிடம் கேட்டதற்கு, தற்போது எனக்கு இது பற்றி தெரியாது. இது பற்றி பதில் கூற விரும்பவில்லை. இதுபோன்ற தகவல்கள் எங்கிருந்து கிளம்புகின்றன என தெரியவில்லை.

டிராவிடும் இந்த தொடரில் குறைந்த ஓட்டத்துடனே ஆட்டம் இழந்து வெளியேறியுள்ளார். கேப்டன் தோனியும் கடந்த இங்கிலாந்து தொடர் மற்றும் அவுஸ்திரேலியா தொடரிலும் சிறப்பாக ளையாட வில்லை. இதனையடுத்து அவரது கப்டன் பதவியைபறிக்க வேண்டும் என கோரிக்கைகள் எழுந்த வண்ணம் உள்ளது.

உ
அருள்மிகு

# கனடா கந்தசுவாமி கோவில்







| நாள் | நிகழ்ச்சி |
| --- | --- |
| **20-01-2012 வெள்ளி** | **வெள்ளிக்கிழமை விரதம்:** காலை 9 மணிக்கு உதயபூசை, 9:30 மணிக்கு அபிசேகம், 10:30 மணிக்கு காலைச் சந்திப்பூசை, 11:15 மணிக்கு வசந்த மண்டபப்பூசையைத் தொடர்ந்து வேல் வீதிவலம் இடம்பெறும். நண்பகல் 12 மணிக்கு உச்சிக்காலப் பூசையைத் தொடர்ந்து அன்னதானம் வழங்கப்படும்.<br>**பிரதோச விரதம்:** பி.ப. 4 மணிக்கு சங்கற்பம், கும்பபூசை இடம்பெற்று 4:30 மணிக்கு சிவன்-பார்வதிக்கு அபிசேகம் இடம்பெறும். 5 மணிக்கு சாயரட்சையின்போது சிவன் பார்வதி அம்மனுக்கு விசேட பூசை நடைபெற்று பின் சாயரட்சைப் பூசை நிறைவடைந்ததும் வணக்கம் செலுத்திய பின் 6 மணியளவில் பிரதோச பூசை நிறைவடைந்து பிரசாதமாக காப்பரிசி வழங்கப்படும்.<br>**வெள்ளிக்கிழமை விரதம்:** மாலை 5 மணிக்கு சாயரட்சைப் பூசை, 5:30 மணிக்கு ஸ்நபன அபிசேகம், 6:30 மணிக்கு 2ஆம் காலப்பூசை, 7:15 மணிக்கு கலை நிகழ்ச்சி, 8:15 மணிக்கு வசந்த மண்டபப்பூசையைத் தொடர்ந்து சுவாமி வீதிவலம் இடம்பெறும். 9:00 மணிக்கு பிரசாதம் வழங்கப்படும். 9:45 மணிக்கு அர்த்தசாமப்பூசையுடன் நடைசாத்தப்படும். |
| **22-01-2012 ஞாயிறு** | **தை அமாவாசை விரதம்:** தை மாதம் 8ஆம் திகதி (22-01-2012) ஞாயிற்றுக்கிழமை அபிராமிப்பட்டர் விழா சிறப்பாக நடைபெறும். 5 மணிக்கு சாயரட்சைப் பூசை, 5:30 கௌரி அம்மனுக்கு ஸ்நபனா அபிசேகம், 6:30க்கு 2ம் காலப்பூசை, 7:15 வசந்த மண்டபப் பூசை - அபிராமிப் பட்டர் உறியில் தொங்கும் காட்சி, 7:45 அபிராமிப்பட்டர் அந்தாதி பாடல் படித்தல், 79ம் பாடல் படிக்க சந்திர வடிவ காட்சி தென்படும். அதனைத் தொடர்ந்து அபிராமி அந்தாதி படித்து நிறைவு செய்தல். 8:45 சுவாமி வீதிவலம், 9:15 அர்த்தசாமப் பூசை, நடை சாத்தப்படும். |
| **24-01-2012 செவ்வாய்** | **துர்க்கை அம்மன் விரதம்:** மாலை 6 மணிக்கு சாயரட்சைப் பூசை, 6:30 துர்க்கை அம்மனுக்கு அபிசேம், 7:30 2ஆம் காலப்பூசையின்போது விசேட பூசை நடைபெறும், 8:15 வசந்த மண்டபப்பூசையைத் தொடர்ந்து சுவாமி வீதிவலம் இடம்பெறும். 9:15 அர்த்தசாமப்பூசை இடம்பெற்று நடை சாத்தப்படும். |
| **26-01-2012 வியாழன்** | **சதுர்த்தி விரதம்:** மாலை 5:30க்கு சாயரட்சைப்பூசை, 6 க்கு பிள்ளையாருக்கு ஸ்நபனா அபிசேகம், 7:30க்கு 2ம் காலப்பூசை, 8:15 வசந்த மண்டபப் பூசை, தொடர்ந்து சுவாமி வீதிவலம், 9க்கு பிரசாதம் வழங்கப்படும். 9:15 அர்த்தசாமப் பூசையுடன் நடை சாத்தப்படும். |
| **27-01-2012 வெள்ளி** | **வெள்ளிக்கிழமை விரதம்:** காலை 9 மணிக்கு உதயபூசை, 9:30 மணிக்கு அபிசேகம், 10:30 மணிக்கு காலைச் சந்திப்பூசை, 11:15 மணிக்கு வசந்த மண்டபப்பூசையைத் தொடர்ந்து வேல் வீதிவலம் இடம்பெறும். நண்பகல் 12 மணிக்கு உச்சிக்காலப் பூசையைத் தொடர்ந்து அன்னதானம் வழங்கப்படும்.<br>மாலை 5 மணிக்கு சாயரட்சைப் பூசை, 5:30 மணிக்கு ஸ்நபன அபிசேகம், 6:30 மணிக்கு 2ஆம் காலப்பூசை, 7:15 மணிக்கு கலை நிகழ்ச்சி, 8:15 மணிக்கு வசந்த மண்டபப்பூசையைத் தொடர்ந்து சுவாமி வீதிவலம் இடம்பெறும். 9:00 மணிக்கு பிரசாதம் வழங்கப்படும். 9:45 மணிக்கு அர்த்தசாமப்பூசையுடன் நடைசாத்தப்படும். |

கூடுதல் விபரமறிய அழையுங்கள்: 416•438•1882

**733 Birchmount Road, Scarborough (Birchmount & Eglinton)**

**www.canadakanthan.com**

# தமிழ் புத்தாண்டும் பொங்கல் விழாவும்













வங்கக் கடலில் வீரகாவியமான கேணல் கிட்டு உட்பட
10 வீர வேங்கைகளின் 19 ம் ஆண்டு நினைவாக நடைபெற்ற
தமிழ் புத்தாண்டும் பொங்கல் விழாவும் கடந்த சனியன்று (14-01-2012)
கனடா சிறீ ஐயப்பன் இந்து ஆலய கலாச்சார மண்டபத்தில் இடப்பெற்றது.
இந்நிகழ்வில் எடுக்கப்பட்ட புகைப்படங்கள் இவை




